


குதூகலம் கொண்டாடுவோம்—
லைப்பாய் சோப்பினால் நீராடுவோம்...
ஆஹாஹா, கிளுகிளுக்கும்
உல்லாச நாம்... 'எல்லாம் இன்ப மயம்!'
அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக்
களைவது லைப்பாய்; குடும்ப முழுமைக்கும்
குன்றாத சுக வாழ்வு'

# லைப்பாய் இருக்குமிடம்

## அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்

L.26-X29 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

பிலவ கார்த்திகை 18



டிசம்பர் 3, 1961

# பொருளடக்கம்



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 18

# தெய்வத்தை ஒதுக்கிவிட்ட ஆட்சி

மக்களின் நடத்தைக்குக் காவல் போலீஸ்காரனல்ல, வேறு அரசாங்கத்து உத்தியோகஸ்தர்களுமல்ல. மந்திரிகளோ, அல்லவே அல்ல.

உண்மைக் காவல் உள்ளத்தில் குடியிருக்கும் தெய்வமே. உள்ளத்திலிருந்து தெய்வத்தைத் தள்ளிவிட்டு ஆட்கொள்ளும் பிசாசுகள் பண ஆசையும் வேறு ஆசைகளும்.

சீலம் வேண்டுமானுல் மக்களின் தெய்வ பக்தியை வளர்க்க வேண்டும். அதுவே உண்மை போலீஸ் காவல்.

எந்தச் சமயமும் எந்த மதமும் ஆண்டவன் அந்த அந்த மக்களுக்குத் தந்த நெறி. அவரவர்களுக்கு அவரவர்கள் சமயமும் மதமுமே நற்காவலாகும். வீண் போகாததும் தவறாததுமான காப்பு ஆகும்.

ஆனபடியால் நாட்டின் தலைவர்களும், மன்னர்களும் மக்கள் ஒப்புக்கொண்ட எல்லாச் சமயங்களையும் மதங்களையும் போற்றி வர வேண்டும். ஞானம் படைத்த முன்னுள் மன்னர்கள் இந்த விஷயத்தில் நமக்கு வழிகாட்டியுள்ளார்கள். எத்தனை கிறிஸ்து கோயில்களும், முஸ்லிம் கோயில்களும், யூதர்கள் கோயில்களும், அவற்றின் சொத்துக்களும் இந்து ராஜாக்களால் காக்கப்பட்டு வந்தன! தற்காலத்திலும் நாம் குடியரசு முறையில் இதைச் செய்ய வேண்டும்.

மடையர்களின் பூச்சாண்டிக் கண்டு பயந்து எந்தச் சமயமும் எந்த மதமும் வேண்டாம் என்று தெய்வத்தையே ஒதுக்கிவிட்டு, உடுப்பணிந்த போலீஸ்காரனையே நம்புவது பெரிய அறியாமையாகும். தற்போது பணப்பேய் தலைவிரித்தாடி அதர்மம் ஓங்கி வளர்ந்திருப்பதற்கு இதுவே காரணம்.

எல்லாச் சமயங்களையும் போற்றித் தருமத்தை நிலைநாட்ட வேண்டும்.

பல சமயங்களின் பல்வேறு தரும ஸ்தாபனங்களுக்கும் காப்பு தர வேண்டும். அந்த அந்தச் சமயத்தினர் அந்த அந்தச் சமயத்துக்குச் செய்து வரும் பணிக்கு வரி போடாமல் ஊக்குவித்து வரவேண்டும். தருமத்துக்கு வரி போடுவது அறிவற்ற அரசாட்சி முறையாகும். இது சுதந்திரக் கட்சியின் கொள்கை.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# எல்லை(யில்லா)த் தொல்லை

பாரதத்தின் பிரதமர் எதையுமே பெரும் போக்குடன் பார்ப்பவர்! நாம் எல்லோரும் ஓர் அங்குலம் என்பதை இரண்டு விரற்கிடை நீளமாகத்தான் காண்கிறோம்! நேரு அவர்களின் கண்களிலோ அவரது ஆப்த நண்பர் ஸ்ரீ கிருஷ்ண மேனன் அவர்களின் உள்ளம் கவர்ந்த செஞ்சீனு நம் மண்ணைக்கவரும் போது ஆயிரக்கணக்கான மைல்களும் ஓர் அங்குலத்துக்குக் குறைவாகவே தோன்றுகின்றன.

'இனி சீனுவுக்கு ஓர் அங்குலம் இடமும் இந்திய மண்ணில் தரமாட்டோம்' என்று அவர் முழங்கிய சில மாதங்களுக்குள்ளேயே லடாக் பகுதியில் சீனுவுக்கு முன்பு பறி கொடுத்த 12000 மைல்களுக்குக் ''கொசுறு'' போட்டு மேலும் கிட்டத்தட்ட 2000 சதுர மைல்களைச் சென்ற ஏப்ரலிலிருந்து செப்டம்பருக்குள் சீனு வசம் செய்து கொண்டிருக்கிறது என்று சொல்கிறார்கள். ஒன்பது இடங்களில் சீனர்கள் ஊடுருவல் செய்திருப்பதாகச் சிலரும், பதினெரு இடங்களில் ஊடுருவியிருப்பதாகச் சிலரும் சொல்கிறார்கள். இதையெல்லாம் பற்றி நாம் அதிகமாக ஒன்றும் கூறுவதற்கில்லை. ஏனெனில் இந்த இதழ் வாசகர்கள் கைக்குக் கிடைக்கும்போது இன்னும் எவ்வளவு இடங்களை இழந்திருப்போம் என்று அநுமானிப்பதற்கில்லை அல்லவா?

ஸ்ரீ கிருஷ்ண மேனன் அவர்களின் கையில் ராணுவ நிர்வாகத்தைக் கொடுத்தது எதன் கையிலோ பூமாலையைக் கொடுத்தாற்போல்தான் முடிந்திருக்கிறது. ராணுவத்தினரின் சேவை நெறியே அடியோடு குலைந்து போய் விட்டது என்று நாட்டு நலனில் அக்கறை கொண்டவர்கள் பயப் படுகிறார்கள். ராணுவத்தைத் தனிப்பட்ட முறையில் குறை கூறுவதற்கில்லை என்றாலும் திரு கிருஷ்ணமேனன் தக்க எதிர் நடவடிக்கை எடுப்பார் என்று கூட எதிர்பார்ப்பதற்கு இடமே இல்லை. ஏனெனில் நேற்றுவரையில் அவர், பருவநிலை காரணமாகச் சீனு வட எல்லையில் வாலாட்டவே முடியாது என்ற 'தீர்க்க தரிசன' வாக்கைத் தான் உதிர்த்து வந்திருக்கிறார். வாஷிங்டனிலும் சில நாட்களுக்கு முன்புதான் 'இந்தியாவுக்கும் சீனுவுக்கும் இடையே தீவிரமான விரோத பாவம் ஏதுமில்லை' என்று சாந்தி மந்திரம் ஜபித்திருக்கிறார். என்னே ராஜதந்திரம்!

ஆனால் நேருஜியோ 'நாங்கள் பீகிங்கை எதிர்த்து ராஜதந்திர நடவடிக்கைகள் எடுத்துள்ளோம்' என்று பார்லிமெண்டில் மார் தட்டிக் கொண்டிருக்கிறார். ''பஞ்ச சீலம், பஞ்ச சீலம் என்று எங்களுடன் தொண்டை வறளக் கூறிய உங்களுக்குச் சீலப் பஞ்சம் வந்து விட்டதே! இப்படி ஆக்கிரமிப்புக்கு மேல் ஆக்கிரமிப்பாக நீங்கள் நடத்தலாகுமா?'' என்று அழமாட்டாக் குறையாகச் சீன சர்க்காருக்கு அனுப்பியுள்ள பிரலாபக் குறிப்புத்தான் இந்த மகத்தான ராஜதந்திர நடவடிக்கை! இந்த 'ஆட்சேபக்' குறிப்பின் ஆசிரியராகிய பிரதமரின் ராஜதந்திரத்தையோ சொல்லி மாளாது. ''பரந்து விரிந்துள்ள நமது வட எல்லையில் ஒவ்வோர் அங்குலத்தையும் காவல் செய்வது முடிகிற காரியமா?'' என்று சிலகாலம் முன்பு அவர் பார்லிமெண்டில் கர்ஜித்தபோதே விஷயமறிந்தவர்கள் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டனர். எதிராளியின் கையை வலுப்படுத்தக் கூடிய ஆபத்தான வாசகம் அல்லவா இது! இதோடு நில்லாமல், ''நெருக்கடி நிலை ஏற்பட்டு விட்டதாக நினைக்கும் வரையில் போரில் குதிப்பதற்கில்லை!'' என்றும் அவர் கூறினார். ஏனோ பாரத சர்க்கார் அநேக விஷயங்களை நினைக்கவே முன்வருவதில்லை. உதாரணமாக 'நினைத்தால் மூன்றே நாளில் கோவாவை வென்றுவிடுவோம்' என்று பிரதமர் முழங்கி எத்தனை மூன்று நாட்களாகி விட்டன?

சீனுக்காரர்கள் கெட்டிக்காரர்கள். லடாக்கின் மத்தியப் பகுதியிலும், கிழக்குப் பகுதியிலும் மேலும் பல மைல்கள் முன்னேறி விட்டார்கள். அதோடு அங்கு காவல் சாவடிகளும் அமைத்துக் கொண்டு விட்டார்கள். தங்கள் ராணுவ தளங்களுடன் அவைகளைப் பிணைத்துப் பேஷான சாலைகளும் போட்டுக் கொண்டு விட்டார்கள்! ரோந்து நடவடிக்கைகளைத் தீவிரப் படுத்தி யிருக்கிறார்கள்! சீனுவிலுள்ள இந்திய அதிகாரிகளையும் முடிந்தவரையில் அவமானப்படுத்தி அவர்கள் நடவடிக்கைகளையெல்லாம் கட்டுப் படுத்தி விட்டார்கள். போதாததற்கு இந்தியாவின் அண்டை நாடுகளான பர்மா, நேபாளம் இவற்றையும் 'ஒரு மாதிரி' சரி செய்து வைத்துக் கொண்டுவிட்டார்கள்! ஏன், நாளைக்கே அமெரிக்காவின் பேராதரவைப் பெற்றுள்ள பாகிஸ்தானுடன் கூட அவர்கள் ராணுவ உடன்படிக்கை செய்துகொள்ளலாம். நம்முடைய லட்சணமான கூட்டுசேராக் கொள்கையையும், ராணுவ நிர்

வாகத்தையும் பொறுத்துக் கொண்டிருக்கும் நாம் சினக்காரர்கள் ஏமாளிகளாக இருக்க வேண்டும் என்று விரும்பிஞல் காரியம் ஆகிவிடுமா என்ன?

ராஜதந்திரியான நமது பிரதமரவர்கள் பார்லிமெண்டில் இந்த ஆக்கிரமிப்புத் தொடர்கதை பற்றி எதுவும் வெளியிடுவது எதிரிக்குத் தகவல் தருவதாகி விடும் என்று கூறி அங்கத்தினர்களின் வாயை அடக்கி யிருக்கிருர். ஆனல் உண்மையில் சீனவிடமிருந்து நாம் மறைக்க வேண்டிய தகவல் ஏதுமே கிடையாது.

"தகவல்மட்டுமில்லை; நமது நாட்டுப் பகுதிகளே அல்லவா அவர்களிடம் உள்ளன?" என்று ஆசாரிய ரங்கா நேருஜியை மடக்கி யிருக்கிருர். நம் நாட்டிலேயேகூட இந்தத் தகவல்கள் எல்லாம் முன்பே வெளியாகி விட்டன.

சென்ற மாத மத்தியில், புது ஆக்கிரமிப்பு குறித்து மேற்கு வங்கப் பத்திரிகைகளில் பல செய்திகள் வந்தபின்தான் இந்திய அரசாங்கத்தார் சீனவுக்கு ஆட்சேபக் குறிப்பு அனுப்பி யிருக்கின்றனர். நாம் கோட்டை விடுவது குறித்த தகவல்கள் எல்லோரையும் விடத் தாமதமாகக் கிடைப்பது ராணுவ மந்திரி இலாகாவுக்குத்தானே என்றுகூட எண்ணத்தோன்றுகிறது. தங்களுக்குத் தகவல் கிடைத்தவுடன் அதை மக்களுக்கு அறிவிக்கும் கடமையை ஆற்றவும் சர்க்கார் தவறி வருகிறது. முன்பு 12,000 மைல்களை இழந்ததை மூன்ருண்டுகள் மூடி வைத்த நேரு சர்க்கார் இப்போதும் சில அங்கத்தினர்கள் அவசரப் பிரேரணை கொண்டு வந்ததின் மீதுதான் இந்த விஷயத்தை வெளியிட்டிருக்கிறது.

இவ்வளவு திறம்பட நமது பாதுகாப்பு இரகசியங்களைப் 'பாதுகாத்து' வரும் ஸ்ரீ கிருஷ்ண மேனன் அவர்களைப் பம்பாய்த் தொகுதி வாக்காளர்கள் அவசியம் மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கத்தான் வேண்டும்! பாதுகாப்பு இலாகாவுடன் 'பூதான' இலாகாப் பொறுப்பையும் தாம் வகிக்க முடியும் என்று ஒத்திகை நடத்திக் காட்டியவரல்லவா அவர்?

[illegible]

23/11/61

## தன் வினை...

பிரதேச காங்கிரஸ் தேர்தல் கமிட்டிகள் அபேட்சகராகத் தேர்ந்தெடுத்த மந்திரிமார்களைப் பற்றிப் புகார் வந்தால் அவற்றை விசாரிக்கப் போவதில்லை என்று காங்கிரஸ் மத்தியத் தேர்தல் கமிட்டி முடிவு செய்துள்ளதாம். 'மண்டலக் கமிட்டியும், ஜில்லாக் கமிட்டியும் அபேட்சகராகத் தேர்வு செய்த மந்திரிகளைக் குறித்துப் பிரதேச கட்டத்தில் எதற்குப் புகார் தெரிவிப்பது?' என்று ஒரு கேள்வியைப் போட்டிருக்கிறதாம் கமிட்டி. செல்வாக்கின் சிகரத்தில் நிற்கும் மந்திரி தேவதைகளைக் குறித்து இந்தக் கீழ் மட்டங்களில் யாரேனும் எதிர்த்துப் பேசுவார்களா என்பதைச் சிந்திக்க காங்கிரஸ் கமிட்டி விரும்பவில்லை.



வட இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்வதற்காகவும், ஆக்ராவில் நடைபெற்ற சுதந்திரக் கட்சி சம்மேளனத்தில் கலந்து கொள்வதற்காகவும் ராஜாஜி அவர்கள் நவம்பர் 14ந் தேதி யன்று சென்னையிலிருந்து பம்பாய்க்குப் புறப்பட்டார்கள். 'கல்கி' அதிபர் சதாசிவம் அவர் களும் காரியாலயத்தினரும், சுதந்திரக் கட்சிப் பிரமுகர்களும் மீனம்பாக்கம் விமான நிலயத் தில் குழுமியிருந்து ராஜாஜி அவர்களை வழியனுப்பி வைத்தனர்.

'புகார் என்று வந்தால் எந்த நிலையி லும் அதை விசாரிக்கத்தான் வேண்டும்; அதுவும் சர்க்கார் சம்பளம் பெற்ற மந்திரிகளைப் பற்றி வந்தால் அவசியம் விசாரித்தே தீர வேண்டும்' என்ற நியாயமான கொள்கையை அது கை விட்டுவிட்டது. அநுபவஞானம் படைத்த தல்லவா காங்கிரஸ்? எனவே தந்தம் தொகுதிகளுக்கு மிக அதிகமான நன் மைகள் செய்து வாக்காளர்களிடம் 'பிடிப்பு' ஏற்படுத்திக் கொண்டுள்ள மந்திரிகள் தேர்தலில் போட்டியிட்டால் தான் வெற்றி கிடைப்பது நிச்சயமென்று அது கருதுகிறது போலும்!

பொதுத் தேர்தலுக்கு அங்கத்தி னர்கள் தேர்ந்தெடுப்பதை ஒட்டி காங்கிரஸ் ஸ்தாபனத்திலிருந்து ஈசல் களைப் போலப் பூசல்கள் தலையெடுத் திருக்கின்றன. இந்த ரசக்குறைவான போக்கைக் கண்டு நேருஜி சிறிதும் வருந்துவதாகத் தெரியவில்லை. காங் கிரஸின் மத்திய பார்லிமெண்டரி கமிட் டிக் கூட்டம் முடிந்த பின், 'காங்கிரஸ் அமோகமான வெற்றி பெறும்' என்றே கூறியிருக்கிறார் பிரதமர். காங்கிரஸின் கஜானா நிரம்பி வழியும்போது வெற்றி பற்றிப் பேசக் கேட்கவா வேண்டும்?

ஆனால் ஐக்கியத்துக்கும், நாணயத்துக் கும் பெயர்பெற்ற ஒரு கட்சி இப்படி இழிநிலை அடைந்து விட்டதே என்று ராஜாஜி விசனிக்கிறார். இவ்வாறு கட்சிக் குள்ளேயே கோஷ்டிகள் வலுப்பதற்கு என்ன காரணம் என்பதையும் வெகு தெளிவாகக் கண்டிருக்கிறார் ராஜாஜி. ஆட்சியாளர்களிடம் கட்டுக்கடங்காத அதிகாரங்கள் குவிந்துள்ளன. அவை களால் எவ்வளவோ ஆதாயங்களை அவர்கள் பெற முடிகிறது. மீண்டும் ஆட்சி உரிமை தனக்கே கிட்டும் என்று காங்கிரஸ் எண்ணுவதால் இந்த ஆதா யங்களைப் பெறக் கட்சி அங்கத்தினர் களுக்குள்ளேயே போட்டா போட்டிகள் வலுக்கின்றன. காங்கிரஸ்காரர்கள் உண் மையான தேச பக்தர்களாக இருந் தாலோ, நிர்வாகம் என்பது எவ்வளவு கடினமான பொறுப்பு என்பதை உணர்ந் திருந்தாலோ நிலைமை இப்படி இராது.

காங்கிரஸ் கட்சியானது, அதிகாரங் களைத் தன்னிடம் தேக்கி வைத்துக் கொள்வதால் தேர்தலில் மற்றக் கட்சி களைவிடத் தனக்குச் சாதகமான சூழ் நிலை இருக்கும் என்று எண்ணியது போக, அந்த அதிகாரத்தைப் பெற ஒவ்வோர் அங்கத்தினருக்குமுள்ள நைப்பாசை காரணமாகக் கட்சிக்குள்ளேயே விரி சல்கள் கண்டிருக்கின்றன.

காங்கிரஸின் தேர்தல் பூசல் அரசாங் கத்திடம் திரண்டிருக்கும் அதிகாரத் துக்கு மறுக்க முடியாத ஓர் அத்தாட்சி யாகும். எனவே, அரசாங்கத்தின் அதிகா ரங்கள் குறைவது நாட்டுக்கு நல்லது என்பது மட்டுமல்ல; ஆட்சிப் பொறுப்பு வகிக்கும் கட்சி உள்பட நாட்டிலுள்ள எல்லா அரசியல் கட்சிகளிலும் உட்புற வேற்றுமைகள் நீங்கவும் அதுவே வகை செய்யும் என்கிறார் ராஜாஜி.

# திட்டத் தினால் நமக்கு என்ன பலன்


சராசரி வருமானத்தில் 55 ரூபாய் அதிகம்


யாவருக்கும் போதுமான உணவு


உடுத்த சுமார் 2 கெஜம் அதிகமான துணி


இலவச, கட்டாய ஆரம்பக் கல்வி


சிறந்த மருத்துவ வசதிகள்


140 லக்ஷம் பேர்களுக்கு புதிய வேலை வாய்ப்புகள்


கிராமந்தோறும் சுத்தமான குடிதண்ணீர்






துணிவு, முயற்சியுடன் தளராது உழைத்து திட்டத்தை நிறைவேற்ற உதவுங்கள்

## நாட்டினருக்கெல்லாம் நல் வாழ்வு

# சுதந்திரத்தின் வழியே சுபிட்ச வாழ்வு

## தேர்தல் அறிக்கை

### 3. விவசாயம்

19. சுதந்திரக் கட்சியின் கவனத்தில் முதலிடம் பெறுவது விவசாயம். விவசாயம் வளம் பெற்ருல் தொழில் துறையும் தன்ளுல் செழிப்படையும் என்பது எளிதில் உணரக்கூடுமாகையால் இக் கட்சி உழவுத் தொழிலை வலுவான அடிப்படையின் மீது அமைக்கும்.

20. விவசாயிகள் சொத்துரிமை பெற்று எஜமானர்களாக இருப்பதை அடிப்படையாகக் கொண்டு, தாளுகவே இயங்கித் தனக்கு உயிரூட்டிக்கொள்ளும் நிலைக்குக் கிராமப் பொருளாதாரத்தை மீண்டும் உருவாக்கிளுல்தான் இந்தியா போன்றதொரு விவசாய நாட்டில் மக்கள் முன்னேற முடியும் என்று உறுதியாகக் கருதுகிறது சுதந்திரக் கட்சி. விவசாயிகளின் நில உடைமை பெரியதாக இருந்தாலும் சரி, சிறியதாக இருந்தாலும் சரி, அவர்களது சொத்துரிமையைச் சுதந்திரக் கட்சி மதித்துத் தற்போதைய நிச்சயமற்ற தன்மையை நீக்கும். உற்பத்தி உயர்வுக்கு உற்சாகமளிக்கும்.

#### விவசாயிகளின் சுதந்திரம்

21. தானே தனக்கு எஜமானனுகச் சுதந்திர வாழ்வு நடத்தும் விவசாயிக்காக ஏற்பட்டது இக்கட்சி. அவனுக்கு நீரும், உரமும், விதையும், கருவியும், கடனும், தொழில் நுணுக்க அறிவும் அளித்து, அவனது நில வளம் முழுதும் பயனுக்கு வருமாறு தீவிர சாகுபடிக்கான வசதிகளைச் செய்து தர வேண்டும் என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கை. நிலப் பறிமுதல் நடவடிக்கைகளினுல் ஏற்பட்ட பல கேடுகளில் ஒன்று உழவர் பெரு மக்களுக்கு வலுவான தலைமை இல்லாமல் செய்வதாகும். விவசாயியினுடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்யும் எல்லா நடவடிக்கைகளையும் சுதந்திரக் கட்சி ரத்து செய்யும்.



சுதந்திரக் கட்சியின் தேர்தல் சின்னம்

22. சொந்தக்காரர்கள், சாகுபடியாளர்கள், உழவுத் தொழிலாளர்கள் ஆகியோரிடையே இணக்கமான நல்லுறவு ஏற்படுத்தும் எல்லாச் சீர்த்திருத்தங்களையும் சுதந்திரக் கட்சி முன்னின்று தொடங்கி வைத்து ஆதரவு தரும். விவசாயிகளின் நிலைமையில் நிச்சயமின்மையையும், தொழிலில் அக்கறையின்மையையும், பூசல்களையும் உண்டாக்கும் நடவடிக்கைகளை அது எதிர்க்கும்.

#### கூட்டுப் பண்ணைக்கு ஆட்சேபம்

23. விவசாயிகளின் சொத்துரிமைகளை எவ்விதத்திலும் பாதிக்காத நிலச் சீர்திருத்தங்களை மட்டுமே சுதந்திரக் கட்சி ஆதரிக்கிறது. அரசாங்க ஆதிக்கத்தின் கீழ் பலரது நிலங்களை ஒன்ருக்கிப் பயிர் செய்வதையே இன்று கூட்டுறவுப் பண்ணை முறை என்று மறு பெயரிட்டழைக்கிருர்கள். இதில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ அடங்கியுள்ள பறிமுதலை சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது. சேவைக் கூட்டுறவுகள், தொழில் கூட்டுறவுகள், பொருள் வாங்குவோரின் கூட்டுறவுகள், கூட்டுறவுப் பாங்குகள் முதலிய உண்மையான கூட்டு முயற்சிகளில் மட்டுமே இக்கட்சி நம்பிக்கை கொண்டுள்ளது. பலருடைய நிலங்களை ஒன்ருக்கிப் பயிர் செய்யவேண்டும் என்ற கொள்கைக்கு உபாயமாகக் கூட்டுறவு முறை உபயோகமாவதைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது.

24. உண்மை மதிப்புக்கு மிகவும் குறைவாக நஷ்டஈடு கொடுத்து நிலச் சொந்தக்காரர்களின் உடைமைகளைப் பறிமுதல் செய்யக் காங்கிரஸ் கட்சிக்கு வசதியளிக்கும் விதத்தில் அரசியல் நிர்ணயச் சட்டத்துக்குத் திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன. இந்தத் திருத்தங்களைச் சுதந்திரக் கட்சி ரத்து செய்து விடும். நிலச் சீர்திருத்தம் என்ற பெயரில் இதுவரையில் சொத்துப் பறிமுதலான நிலச் சொந்தக்காரர்களுக்கு உண்மையான நஷ்ட ஈட்டையும் அது தரும்.

25. விவசாயிகளை நியாயமான முறையில் நடத்த வேண்டும். நாட்டுக்குத் தேவைப்படும் உணவை, கஷ்டங்கள் மிகுந்த சூழ்நிலையில் உற்பத்தி செய்யும் விவசாயிகளது சேவைக்காகத் தக்க வெகுமதி தர வேண்டுமே யல்லாது அவர்களுக்கு வரி விதிக்கலாகாது என்பது இக்கட்சியின் கோட்பாடு. எனவே சுதந்திரக் கட்சியானது,

(i) இப்போதுள்ள நில வரிகளை ரத்து செய்துவிடும். நில உடைமைக் கணக்கு

களை வைத்துக் கொள்வதற்குத் தேவைப்படும் அளவுக்கே நிலவரி வசூலிக்கும்.

(ii) கிராம வாழ்க்கைக்குத் தேவைப்படும் ஆலைப் பண்டங்களின் விலையோடு ஒப்பிட்டுப் பார்த்து அதற்குப் பொருந்தும் மட்டத்தில் விவசாயப் பொருள்களின் விலைகளை அமைக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளும்.

(iii) இயற்கை உற்பாதங்களிலிருந்து காப்பு அளிப்பதற்கான ஓர் இன்ஷூரன்ஸ் நிதியை நிறுவும்.

## விவசாயத் தொழிலாளர்கள்

26. நிலமில்லாத உழவுத் தொழிலாளிக்குப் போதுமான ஊதியம் கிடைக்க வேண்டுமென்பதும், உழவுத் தொழிலையே நிரந்தரமாகக் கொண்டவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்பதும் சுதந்திரக் கட்சியின் கொள்கை. நிலமில்லாத உழவுத் தொழிலாளர் பிரச்னை என்பது உண்மையில் கிராமப்புற வேலையின்மைப் பிரச்னையின் ஒரு தோற்றமே யாகும். இவர்களுக்கு வேலை வாய்ப்புக்கள் அளிக்கவும் நிலத்தையே நம்பி வாழ்பவர்களின் நெருக்கடியைத் தவிர்க்கும் பொருட்டும் சிறு தொழிற் கூடங்களைக் கிராமப்புறங்களில் நிறுவுவது சுதந்திரக் கட்சியின் கொள்கையாகும்.

## மின்சாரம் வழங்குதல்

27. சுதந்திரக் கட்சியானது,

(i) கிராமப் பகுதிகளில் விரைவாக மின்சாரம் வழங்குவதற்கான ஏற்பாடுகளில் விசேஷ கவனம் செலுத்தும்.

(ii) உபரியாகவுள்ள உழவுத் தொழிலாளரை இதர துறைகளில் ஈடுபடுத்துவதற்காகச் சிறிய அளவில் அமைந்த நவீன இயந்திரத் தொழிலகங்களை நிறுவும்.

(iii) விவசாயக் கருவிகளையும் இதர கருவிகளையும் சீரான முறையில் வைத்திருப்பதற்காகத் தொழில் நுணுக்கக் கல்வி அளிக்கும். பல பட்டறைகளையும் அமைத்து அவற்றின் சேவையால் மக்கள் பலனடைய வழி வகுக்கும்.

28. கால்நடைச் செல்வத்தைச் சிறப்புறச் செய்யவும், விவசாயத்துக்காக ஆர்ஜிதம் செய்யப்படாத நிலங்களில் காடு வளர்க்கவும், விவசாயிகளை ஒருங்கு சேர்த்து அவர்களுக்குச் சுதந்திரக் கட்சி பயிற்சி அளிக்கும். அவர்களைக் கொண்டு, தரிசு நிலத்தைச் சாகுபடிக்குக் கொண்டு வரும். இதில் செயல் துடிப்புள்ள விவசாயிகளின் பணியை அது பயன்படுத்திக் கொள்ளும். இதற்காகக் குறிப்பிடப்பட்ட ஒரு காலம் வரையில் சலுகை விகிதத்தில் மானியங்கள் வழங்கும். இந்த உதவியைப் பெறுவதில் ஏழை மக்களும், பின்தங்கிய வகுப்பினரும் முதலிடம் பெறுவார்கள். (தொடரும்)

---

# சுதந்திர நிதி

*(4—11—61 லிருந்து 25—11—61 வரை)*

| பெயர் | ரூ. | பை. |
|---|---|---|
| கே. என். ராதாகிருஷ்ணன் | 2 | 0 |
| எம். சுப்பிரமணியம் | 10 | 25 |
| பி. கே. பரமேசுவர அய்யர் | 2 | 0 |
| ஆர். எஸ். ஜானகிராமன் | 10 | 0 |
| கே. வி. ராமசாமி | 5 | 0 |
| டி. எஸ். விசுவநாதன் | 101 | 0 |
| எம். சுப்பிரமணியம் | 2 | 0 |
| டி. ஆர். சுப்பிரமணியம் | 25 | 0 |
| எஸ். ராமசாமி அய்யர் | 50 | 0 |
| டி. எஸ். ரங்கநாத பிள்ளை சன்ஸ் | 250 | 0 |
| ஆர். எஸ். கிருஷ்ணராவ் | 101 | 0 |
| எஸ். ரங்கநாதன் | 5 | 0 |
| கே. ஆர். நாராயணன் | 2 | 0 |
| ஏ. எம். சிதம்பரம் | 100 | 0 |
| என். ராஜகோபாலன் | 50 | 0 |
| கே. எஸ். சாமிகுளத்தூர் அய்யர் | 25 | 0 |
| ஏ. வெங்கடரமணய்யர் | 101 | 0 |
| டி. கே. சங்கரநாராயணன் | 51 | 0 |
| எஸ். ராமதுரை | 25 | 0 |
| என். சுந்தரராமன் | 30 | 0 |
| பார்கவா | 2000 | 0 |
| ஏ. வி. வேங்கடராமன் | 20 | 0 |
| வேலூரர் (சேலம்) அன்பர் | 20 | 0 |
| பி. ஏ. சாமி உடையார் | 25 | 0 |
| கே. எஸ். மகாலிங்கமய்யர் | 50 | 0 |
| என். கணேசய்யர் | 100 | 0 |
| கே. தண்டபாணி செட்டி | 201 | 0 |
| எச். ரங்கநாதராவ் | 50 | 0 |
| வி. ஆர். ராகவாச்சாரி | 25 | 0 |
| ஆர். என். மீனாட்சிசுந்தரம் | 101 | 0 |
| டபிள்யூ. ஆர். ராமச்சந்திரராவ் | 101 | 0 |
| ஏ. செல்வராஜ் முத்தையா | 50 | 0 |
| கே. ஏ. பெருமாள் ராயர் | 50 | 0 |
| எஸ். முருகேச முதலியார் | 15 | 0 |
| ஏ. பெரியசாமி | 10 | 0 |
| முடிகொண்டான் அன்பர் | 50 | 0 |
| எஸ். பி. சீனிவாசன் பிரதர்ஸ் | 50 | 0 |
| காசிநாராயண அய்யங்கார் | 101 | 0 |
| வி. எஸ். பழனியப்ப முதலியார் | 25 | 0 |
| 10-1-61 முதல் 3-11-61 முடிய | 8837 | 86 |
| ஆக ரூ. | 12829 | 11 |

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்கிறவர்கள் ஸ்ரீ ராஜாஜி c/o கல்கி காரியாலயம், சென்னை - 10 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.




# அட்மிரல்

## சைக்கிள்கள்



காடுமுரடான பாதைகளில்
சொகுசாய் ஓட அட்மிரல்



**ஹிந்த் சைக்கிள்ஸ் லிட்., 250 ஒர்லி, பம்பாய்-18**

ASP/HC/179

*புது தில்லியில் நடைபெறும் இந்திய கைத்தொழிற் பொருட்காட்சியில்*
*பிர்லா கூடத்திலுள்ள ஹிந்த் சைக்கிள் ஸ்டாலுக்கு விஜயம் செய்யுங்கள்*

ஹிந்த் பிரேம்களும் போர்க் கம்பிகளும் உறுதிக்கும் பலத்துக்கும் இன்று அகில இந்தியப் புகழ் பெற்றுவிட்டன. 'ஹிந்த்' சைக்கிள் பிரேம்களும் போர்க்குகளும் உறுதியோடும் பலத்தோடும் சிறந்து விளங்குவதால் எண்பது சத விகிதத்துக்கு மேல் ரிக்ஷாக்களில் உபயோகப் படுத்துகிறார்கள். இதற்குக் காரணம் இந்தியன் ஸ்மெல்ட்டிங் அண்டு ரிபைனிங் கம்பெனியார் தயாரித்தளித்துள்ள பித்தளை ஸோல்டரிங்கினால் உறுதியாகப் பற்றவைத்திருப்பதுதான்!

*ஸோல் ஆர்கனைஸர்கள்:*

**பி. கே. ஜாபி & கோ., 99, நைனியப்ப நாயக்கன் தெரு, சென்னை-3**

# கேட்டீர்களா சேதி



செய்திசேகரன்

"கொசுக்களுக்குச் சாக்கடை எப்படி உற்பத்தி ஸ்தலமாக இருக்கிறதோ, அதேபோல் மாணவர்களின் தங்கும் விடுதி ஒழுங்கீனத்துக்கு உற்பத்திஇடம்!'' என்றார் திருபி.டி.ராஜன்.

இதை அப்படியே ஒப்புக் கொள்வதற்கில்லை. கொசுக்கள் உற்பத்தியாகின்றன என்பதற்காகச் சாக்கடைகளே வேண்டாம் என்று யாரும் கூற முடியாது. அதேபோல் மாணவர்களின் ஒழுங்கீனத்துக்கு விடுதிகள்தான் காரணம் என்பதற்காக விடுதிகளே வேண்டாம் என்று கூறவும் முடியாது.

✲

"திண்டுக்கல்லில் ஓர் ஊழியர் வீட்டில் ஓட்டைப் பிரித்து உள்ளே இறங்கி நோட்டுக்கள், துணிமணிகள் ஆகியவற்றை யாரோ திருடிச் சென்று விட்டதாகப் போலீஸில் புகார் செய்யப் பட்டுள்ளது.''

கொடுக்கிற தெய்வம்தான் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும் என்பார்கள். எடுக்கிறவன் கூட அல்லவா கூரையைப் பிய்த்துக் கொண்டு எடுக்கிறான்!

✲

"என் சிறு வயதில் சவரன் விலை ரூ. 13. இதைவிடக் குறைவாக எப்போதுமே விற்றதில்லை!'' என்று தாத்தா பெருமைப்பட்டுக் கொண்டார்.

"இப்பொழுது சவரன் விலை ரூ. 100 தாத்தா! இனிமேல் இதைவிடக் குறைந்த விலைக்குப் போகாதே!''— என்று பேரன் பதில் கூறிப் பெருமைப் பட்டுக் கொள்ளலாம்.

✲

"பொள்ளாச்சியில் ஒரு வாலிபர் 115 மணி நேரம் இடைவிடாமல் சைக்கிள் சவாரி செய்தாராம். சைக்கிளில் இருந்தபடியே குளிப்பது, உடை மாற்றுவது போன்ற பல அற்புத சாதனைகளை அவர் செய்து காட்டினாராம்.''

'நூற்றுப் பதினைந்து மணி நேரம் சைக்கிள் சவாரி செய்தது பெரிய சாதனையல்ல. இன்னும் கொஞ்சம் சிரமப்பட்டுச் சைக்கிளிலேயே குடித்தனம் செய்யவும் பழகி விட்டாரானால் சென்னை நகரிலுள்ள வீட்டுப் பஞ்சத்தைச் சமாளிக்கச் சௌகரியமாயிருக்கும் என்கிறார் வீடு கிடைக்காமல் வீதிவலம் வரும் வீதிவிடங்கனார்!

✲

"அடிக்கடி ரயில் விபத்து ஏற்படுவதைத் தடுக்கத் தக்க நடவடிக்கை எடுப்பேன்!'' என்று ரயில்வே மந்திரி ஜகஜீவன்ராம் உறுதி கூறினாராம்.

ரயில் வண்டிகள் ஓடுவதனால்தானே விபத்து நேருகிறது! ஒருவேளை ரயில் வண்டிகளையே நிறுத்திவிடுவாரோ!

✲

"சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் ரயிலில் வந்து இறங்கிய ஓர் ஆசாமியைப் போலீசார் வளைத்துச் சோதனை போட்டார்கள். அவரிடமிருந்து 19 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள தங்கக்கட்டி கைப் பற்றப்பட்டது!''

தங்கக் கட்டியைக் கைப்பற்றிய போலீஸ் அதிகாரியைச் சிங்கக் குட்டி என்றுதான் சொல்ல வேண்டும்!

✲

"உலகில் சமாதானம் ஏற்பட வேண்டுமானால் பயமும் துவேஷமும் அவநம்பிக்கையும் நீங்க வேண்டும். ஆயுதக் குறைப்புப் பிரச்னை ஒழிந்தால்தான் அவநம்பிக்கை ஒழியும். அவநம்பிக்கை ஒழிந்தால்தான் பயம் ஒழியும்!'' என்று நேருஜி மெக்ஸிகோவில் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்.

"கல்யாணமானால்தான் பைத்தியம் தெளியும்; பைத்தியம் தெளிந்தால் தான் கல்யாணமாகும்'' என்பதை நினைவுபடுத்துகிறதே இது!

✲

"சரும வியாதிகளுக்கும், ரத்தத்தில் உள்ள அசுத்தங்களைப் போக்குவதற்கும் சீயக்காய் சிறந்த மருந்தாகும். இதன் அபூர்வச் சக்தியினால் ஏற்படும் பலனை மக்கள் அநுபவிக்க விரைவில் வழி செய்ய வேண்டும்!'' என்று ஆயுர்வேத ஆராய்ச்சிக் கவுன்சில் தீர்மானித்திருக்கிறது.

ஆனால் நம் மளிகைக் கடைக்காரர்கள் மேற்படி ஆராய்ச்சியாளர்களை விடக் கெட்டிக்காரர்கள். சீயக்காயின் விலையை அபரிமிதமாக ஏற்றி அதன் பலனை மக்கள் உடனடியாக அநுபவிக்கும்படி செய்து விடுவார்கள்!


Bangle Bracelet
Expandable Bracelet
Model No. 97
Pat. Lic. No.
58926 - 56
"Bentex"
WATCHES • STRAPS
BRACELETS
A wide range of models to choose from.
SOLE AGENTS:
"Bentex" SALES CORPORATION,
BENTEX BLDG., TARDEO, BOMBAY 7.
MANUFACTURERS:- COLLINS & CO., BOMBAY 7.
AVAILABLE AT ALL WATCH DEALERS



# மணிபல்லவம்

## 4 - புரியாத புதிர்கள்

இருளில் தந்தையாரின் ஊன்றுகோலைப் பார்த்து நடுங்கிய அதே இரவில் சுரமஞ்சரி தானும் வசந்தமாலையுமாகச் சிந்தித்துச் சிந்தித்து ஒரு முடிவும் கிடைக்காமல் கலங்கும்படியாக நேர்ந்த மற்றொரு நிகழ்ச்சியும் நிகழ்ந்திருந்தது. அந்த நாளின் இரவு அவளால் மறக்க முடியாதது. தானும் தோழியுமாகத் தங்கள் மாடத்தின் உட்புறம் நின்று பேசிக் கொண்டிருந்தபோது பெருமாளிகையின் முன்புறம் வாயிலருகே யாரோ யாரையோ பளீரென்று அறைகிற ஓசை கேட்டதை உணர்ந்து விரைந்து சென்று பார்த்ததை எண்ணி எண்ணி மனம் குழம்பிக்கொண்டிருந்தாள் சுரமஞ்சரி. பல அர்த்தங்களை உடைய ஒரே பதத்துக்கு எந்த இடத்தில் எந்த அர்த்தம் என்று புரியாமல் புதிதாக மொழியைக் கற்கிறவன் மருள்வதுபோல் அவள் மருண்டாள். சுரமஞ்சரியின் சிந்தனையில் அப்போது சுழன்று கொண்டிருந்த எண்ணங்கள் யாவும் விடுவிக்க முடியாத புதிர்களாக இருந்தன. புதிர்களிலிருந்து விடுபடுவதற்கு முன் தானே அங்கிருந்து விடுபட்டு ஓடிவிடலாம் போலத் தோன்றியது அவளுக்கு. அதுவும் இயலாமல்தான் காவலில் வைக்கப்பட்டிருப்பதை நினைத்தபோதுதான் அவளுடைய வேதனை அடங்காமல் வளர்ந்தது. வேதனை வளரும்போது சிந்தனையும் வளர்ந்தது. பொதுவாகத் தங்களுக்குள் பலவீனமுடைய இருவர் பலமும் வலிமையும் கொண்டு எதையும் சாதிக்க முடிந்த ஆற்றல்கள் நிறைந்தவர்களாகத் தங்களைக் காட்டிக் கொள்வதற்காக ஒன்று சேருவதுண்டு. 'நகைவேழம்பரை முற்றிலும் அடக்கியாள முடியாதபடி தந்தையாரிடம் உள்ள ஆற்றாமை என்ன? தந்தையாரை முற்றிலும் புறக்கணித்து விட்டுத் தனித்தவராக நிமிர்ந்து நிற்க முடியாதபடி நகைவேழம்பரிடம் உள்ள ஆற்றாமை என்ன? இரண்டு ஆற்றாமைகள் ஒன்றுபடுவதால் ஏதேனும் ஓர் ஆற்றல் தோன்ற முடியுமென்று அரசியல்



நுணுக்கங்களைக் கூறும்போது திருவள்ளுவரைப் போன்ற புலவர்கள் தங்கள் நூல்களில் தெரிவித்திருப்பதை' நினைத்துக் கொண்டாள் சுரமஞ்சரி. இந்தச் சிந்தனைப் புதிர்களுக்கு மேல் மற்றொரு புதிரும் மறுநாள் காலை அந்த மாளிகையில் அவளுக்காகக் காத்திருந்தது. தந்தையாரையும், நகைவேழம்பரையும் மறுநாள் காலையிலிருந்து அங்கே காணவில்லை. அவர்களை வசந்தமாலையோ தானோ நேரில் பார்க்க முடியாவிட்டாலும் மாளிகையில் ஏதாவதொரு பகுதியிலிருந்து அவர்கள் இருவரும் பேசுகிற குரலையாவது சுரமஞ்சரி கேட்பாள். மறுநாள் விடிந்ததிலிருந்து மாளிகையின் எந்தப் பகுதியிலும் தனியாகவோ, சேர்ந்தோ நகைவேழம்பர் - தந்தையார் இருவருடைய குரலும் கேட்கவில்லை. அந்த இரண்டு குரலும் கேட்காததனால் மாளிகையே மாறிப் போய்த் திடீரென்று புதுமை பெற்றுவிட்டாற் போலிருந்தது. முதல் நாள் இரவில் கண்டதையும் மறுநாள் காலையில் அவர்கள் இருவரும் காணமற் போனதையும் சேர்த்து எண்ணி இந்த இரண்டு நிகழ்ச்சிகளுக்கும் ஏதேனும் காரண காரியத் தொடர்பு இருக்குமோ என்று நெஞ்சம் குழம்பினாள் சுரமஞ்சரி. நூலில் சிக்கல் விழுவதுபோல் ஒரு புதிரை அவிழ்க்கும் முயற்சியில் இன்னொரு புதிர் தோன்றிக் குழப்பத்தை மிகுதியாக்கியதே ஒழியத் தெளிவும் பிறக்கவில்லை; புதிரும் விளங்கவில்லை.

''வசந்தமாலை! பார்த்தாயோ, இல்லையோ? இந்த மாளிகையின் இன்றைய நாடகத்தில் காட்சி மாறிவிட்டது. நடிப்பும் மாறிவிட்டது. அவர்களுடைய பேச்சுக் குரலே கேட்கவில்லை. இன்னும் என்னென்ன கெடுதல்களுக்கு ஏற்பாடு நடக்கிறதோ, தெரியவில்லை''—என்று தன் தோழியிடம் சொன்னாள் சுரமஞ்சரி. யாரிடமாவது ஒரு நோக்கமுமின்றிப் பேச்சுக் கொடுத்தாலும் கூட அப்போதுள்ள சூழ்நிலையில் அதுவே தன் மனத்துக்கு ஆறுதலாயிருக்குமென்று அவள் எண்ணினாள்.

''இன்னும் சில நாட்களுக்கு இந்தப் பெருமாளிகையில் இரைந்து கேட்கிற குரல்கள் எவையும் ஒலிக்காது, அம்மா! உங்கள் தந்தையாரும் நகைவேழம்பரும் இன்று அதிகாலையிலேயே கடற் பயணத்துக்காகப் புறப்பட்டுப் போய் விட்டார்களாம். சீனத்திலிருந்து வந்து சேர வேண்டிய கற்பூரக் கப்பல் ஏதோ இதுவரை வரவில்லையாம். அதைத் தேடி எதிர்கொண்டு போயிருக்கிறார்களாம். திரும்பி வருவதற்குச் சில நாட்களாகும்போல் தோன்றுகிறது. காலையில் மாளிகையின் கீழ்ப்புறத்திலிருந்து இங்கு வந்திருந்த பணிப்பெண்ணைக் கேட்டு இதைத் தெரிந்து கொண்டேன்'' என்றாள் தோழி.

''அப்படியா? இதை என்னால் நம்ப முடியவில்லை. ஆனால் இதில் நம்பவும் இடமிருக்கிறது வசந்தமாலை! நேற்று இரவு நடுச் சாமத்துக்கு மேல் இதோ இப்போது நாம் நின்று கொண்டிருக்கிறோமே, இந்த இடத்திலிருந்து கீழே முன்புறத்து வாயிலருகே என்ன காட்சியைக் கண்டோம் என்பதை நினைவூட்டிக்கொள். தந்தையாரும் நகைவேழம்பரும் எதிரெதிரே எப்படி நின்றார்கள் என்பதையும் சிந்தித்துப் பார். இன்றைக்குக் காலையில் பொழுது விடிந்ததும் இவர்கள் இருவரும் ஒன்றாகச் சேர்ந்து கப்பலில் புறப்பட்டுப் போயிருக்கிறார்கள் என்றால் யாராவது நம்புவார்களா?''

''நம்புவார்களோ, மாட்டார்களோ நடந்திருக்கிறது. இன்று வைகறையில் இங்கு வந்து இந்தச் செய்தியை எனக்குக் கூறிய பணிப் பெண் மிகவும் தன்மையானவள். நமக்கு மிகவும் வேண்டியவள். அவள் பொய் சொல்லியிருக்க மாட்டாள்.''

''வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்பதை வைத்துக்கொண்டு நம்பிக்கையையும், அவநம்பிக்கையையும் தீர்மானம் செய்ய முடியுமானால் என்னுடன் பிறந்த வானவல்லியும், என்னைப் பெற்று வளர்த்த நற்றாயும்கூட இப்போது இந்த மாடத்திற்குள் எட்டிப் பார்க்காமல் இப்படிப் புறக்கணிப்பாக இருப்பார்களா? இந்தப் புறக்கணிப்பை என்னவென்று சொல்லுவது? இந்த மாளிகையில் நான் ஒருத்தி உயிரோடு இருப்பதை எல்லாருமே மறந்துபோய் விட வேண்டுமென்று இட்டமிட்டுக் கொண்டவர்களைப் போல நிச்சயமாக மறந்தே போய் விட்டார்களடி வசந்தமாலை! இந்த மாளிகைக்கு உள்ளேதான் இப்படி என்றால் வெளியிலாவது என்னைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பவர்கள் உண்டோ? அதுவும் இல்லை. நான் எதற்காக இன்னும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன் என்று எனக்கே விளங்கவில்லை, தோழீ! இந்த மாளிகை, இதிலிருக்கிறவர்கள் எனக்குத் தருகிற புறக்கணிப்பு, எல்லாவற்றையும் நான் மறந்துவிட முடியும். எப்போது தெரியுமா? நான் இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருக்கிற ஒருவர் என்னைப் பற்றியும் சிறிது நினைக்கிறார் என்று நான் அறிய நேரும்போது

இந்த உலகத்திலேயே நம்பிக்கை நிறைந்தவளாக நீ என்னைக் காண வாமடி வசந்தமாலை! நாம் வாழ்வ தற்கு என்று தனியாக நமக்கு ஒரு நோக்கம் இருக்க வேண் டும். அல்லது நம்முடைய வாழ்க்கையைக் கவனத்தோடு நோக்கிக் கொண்டிருப்ப தற்குத் தனி யாக ஒரு மனி தர் வேண்டும். இரண்டுமே இல்லாவிட் டால் உயிர் வாழ்வதில் பயன் என்ன? ஒன்றின் மறதி என்பது மற் றொன்றின் ஆழ மான நினைவு தான்! மறப்பதற்கும் முடியாமல் நினைப்ப தற்கும் பயனின்றி இப்போது நான் எப் படியோ வாழ்ந்து கொண்டிருக்கி றேன்....''

''உங்கள் வேதனை எனக்குப் புரிகிறது, அம்மா! ஆனால் நான் என்ன செய்ய முடியு மென்றுதான் எனக் குத் தெரியவில்லை. உங்கள் தோழிக்கு, உங்களிடம் நிறைந்த அநுதாபம் இருந்தும் அவள் வாயில் லாப் பூச்சியா யிருக்கிறாள் என்பதை நீங்களே அறிவீர்கள்...''

''நீ என்ன செய்வாய்? என்னைப் போலவே நீயும் சிறைப்பட்டிருக் கிறாய்! உனக்கு என்மேல் கனிவும், அநுதாபமும் இருப்பதே நீ எனக்கு இதயபூர்வமாகச் செய்யும் உதவி தான். அந்த அநுதாபத்தைக் கூட என் தாயும் சகோதரியும் எனக்கு அளிக்க முடியவில்லை போலிருக்கிறது. வசந்தமாலை! நீ எனக்கு அளித்துக் கொண்டு வருகிற பொருள் விலை மதிப்புக்கு அப்பாற்பட்ட பெருமான முடையது. மனத்தின் ஆழத்திலிருந்து கிடைக்கிற மெய்யான அநுதாபத் துக்கு விலையேயில்லையடி...''

''உங்கள் தாயும், சகோதரியும் இயல்பாகவே இப்படி இருப்பார்க ளென்று என்னால் நம்ப முடியவில்லை,



அம்மா! இதில் ஏதோ சூழ்ச்சி இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. உங்கள் தாயும் வானவல்லியும் வந்து உங்களைக் காண முடியாதபடி ஏதேனும் பொய் சொல்லி யிருப்பார்களோ என்று நான் சந்தேகப்படுகிறேன். வெறும் ஊன்றுகோலை நிறுத்தி வைத்தே இருட்டில் உங்களையும் என்னையும் பயமுறுத்தி விடலாமென்று கருதியவர் மற்றவர்களை வேறு விதமாகப் பயமுறுத்தி யிருக்க மாட்டாரென்பது என்ன அம்மா நிச்சயம்? ஒன்று உங்கள் தாயும் சகோதரியும் பயமுறுத்தப்பட்டு உங்களைப் பார்க்க வராமல் இருக்க வேண்டும், அல்லது ஏமாற்றப் பட்டு உங்களைப் பார்க்க வராமல் இருக்க வேண்டும். வேறு விதமாக நினைப்பதற்கு என்னால் முடியவில்லை.''

''உண்மையில் இப்படி இருக்குமோ என்னவோ, ஆனால் உன்னுடைய பதில் எனக்கு ஆறுதலளிப்பதாயிருக்கிறது. நாம் எதையாவது நினைத்துக் கொண்டே இருக்க வேண்டும். அது முடியாவிட்டால் யாராலாவது நினைக்கப் பட்டுக் கொண்டே இருக்க வேண்டும். இரண்டுமில்லாமல் நடைப்பிணமாக வாழ்வதற்கு நம்மைப் போன்ற பெண்களால் ஆகாது. நான் அதியற்புதமான பேரழகு படைத்தவளென்று நீங்களெல்லாம் வாய்க்கு வாய் என்னைப் புகழுகிறீர்கள். இதோ இந்த மாடத்திலிருக்கும் நிலைக் கண்ணாடியும் என்னையே பிரத்தியட்சமாகக் காட்டி எனக்கே என் அழகை நிரூபிக்கிறது. ஆனால் நான் அழகா யிருக்கிறேன் என்பதை நீங்களும் இந்தக் கண்ணாடியும் இதற்கெல்லாம் மேலாகப் பூம்புகார் நகரமும் சொன்னாலும்கூட அவற்றுக்காக நான் பெருமைப்பட மாட்டேன். என்னுடைய அழகை யார் உணர வேண்டுமென்று நான் ஆசைப் படுகிறேனோ, அவர் உணர வேண்டும். அவர் நினைக்க வேண்டும். அவர் பாராட்ட வேண்டும். ஆகாயத்தை நோக்கி நிமிர்ந்து பெரிதாக எதையோ இலக்கு வைத்துக் கொண்டு பார்க்கும் அந்த நளின நயனங்களின் ஆண்மை திகழும் கம்பீரமான பார்வை கீழே குனிந்து என்னைப் பார்க்க வேண்டும். என்னைத் தேட வேண்டும். என் அழகை நாட வேண்டும். இந்த ஆசை நிறைவேறாத வரை நான் நினைக்கிறவள் தான்; நினைக்கப் படுகிறவள் இல்லை... வசந்தமாலை! ஒரு செய்தியை நான் எப்படி நினைக்கிறேனோ, அப்படியே உனக்குப் புரிய வைப்பதற்கு முடிந்த வார்த்தைகளை இப்போது நான் என்னுடைய பேச்சுக்காகத் தேடிக்கொண்டிருக்கிறேன். யாருடைய அழகில் நான் மனந் தோய்ந்திருக்கிறேனோ, அவருடைய சொற்களாலேயே என்னுடைய அழகு அங்கீகரிக்கப்பட வேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன்...''

இவ்வாறு சொல்லிக் கொண்டே வந்த சுரமஞ்சரி சொற்களை நிறுத்திக் கொண்டு வசந்தமாலையின் கண்களை உற்றுப் பார்த்தாள். அந்தக் கண்களில் குறும்பு தெரிந்தது. எதையோ சொல்ல விரும்பும் ஆவலும் தெரிந்தது.

''நீங்கள் எதைச் சொல்லத் தவிக்கிறீர்களோ, அதையே



உங்கள் சொற்களைக் காட்டிலும் நயமாக உங்களுடைய கண்கள் பேசுகின்றனவே அம்மா?''

''வாய் திறந்து பேசியே புரியாதவர்களுக்குக் கண்களால் பேசியும் பயனில்லை, தோழி! இரண்டு வகையான பேச்சிலும் இதுவரை எனக்குத் தோல்விதான். தொடர்ந்து தோற்றுப் போய்க் கொண்டே வருகிறவள் ஆசைப்படும்படியாக இந்த உலகத்தில் என்ன மீதமிருக்கிறது?''

''வெற்றி மீதமிருக்கிறதே; அது போதாதா அம்மா? எதில் நிறையத் தோற்றுக் கொண்டிருக்கிறோமோ அதில் நிறைய ஆசைப்படுவதும் நிறையத் தாகம் கொள்வதும் தவிர்க்க முடியாதவை என்று நீங்களே சொல்வீர்களே....?''

''பார்க்கலாம்! நான் சொல்லிக் கொண்டிருப்பதில் நானே தோற்றுப் போய்விட முடியாதென்பது என்ன உறுதி?'' என்று சொல்லிச் சிரிக்க முயன்று கொண்டே முதல் நாள் இரவிலிருந்து அந்த மாடத்தில் கிடந்த தந்தையாரின் ஊன்றுகோலைத் தன் போக்கில் கையிலெடுத்துச் சுழற்றினாள் சுரமஞ்சரி. ஒரு நோக்கமுமில்லாமல் தற்செயலாக அவள் செய்த இந்தச் செயலுக்கு முற்றிலும் எதிர்பாராத விளைவு ஒன்று ஏற்பட்டது. அந்த விளைவும் அதில் அடங்கியிருந்த உண்மையும் சுரமஞ்சரி வசந்தமாலை இருவரையுமே பெரு வியப்பில் ஆழ்த்தியது.

ஒன்றையும் செய்ய வேண்டிய குறிப்பில்லாதபோது கைத்தினவாகத் தானே செய்யும் நோக்கமில்லாத காரியமாகத்தான் சுரமஞ்சரி ஊன்றுகோலின் பிடிப்பைப் பற்றிச் சுழற்றினாள். இரத்தினக் கற்கள் பதிக்கப் பெற்றிருந்த அந்த யாளி முகப் பிடியோ மரை மரையாகக் கழன்று ஊன்றுகோலிலிருந்து தனியே பிரிந்து அவள் கைக்கு வந்துவிட்டது. பிடியும், ஊன்றுகோலும் தனித்தனியே கழன்றதற்காக மட்டும் சுரமஞ்சரியோ, வசந்தமாலையோ வியப்படையவில்லை. அவை தனித்தனியே கழன்றபோது அவற்றினிடையே சிறைப்பட்டுக் கிடந்த உண்மை ஒன்றும் கழன்று வெளியேறித் தனியே தரையில் வீழ்ந்தது.

யாளி முகப் பிடி தனியே கழன்ற பின் நீண்ட குழல் போலிருந்த ஊன்றுகோலின் உள்ளேயிருந்து சங்கு சக்கரம், வில், வாள், கதை ஆகிய ஆயுதங்களைப்போல் சிறு சிறு பொன் வடிவங்களால் கோவை செய்யப்பட்ட ஆரம் ஒன்று வெளிவந்து கீழே விழுந்தது.

''இது ஐம்படைத் தாலி என்னும் ஆரம் அம்மா!'' என்று சொல்லிக் கொண்டே கீழே குனிந்து அந்த ஆரத்தை எடுத்துத் தலைவியிடம் நீட்டினாள் வசந்தமாலை.

''சிறு குழந்தைகளுக்குக் காப்பிடும் போதல்லவா இதையும் அணிவார்கள்? இதை எதற்காக இந்த ஊன்றுகோலுக்குள் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறார்?'' என்று கேட்டுக் கொண்டே அதை வாங்கி வியப்புடன் பார்க்கலானாள் சுரமஞ்சரி.

''ஒருவேளை இந்த ஊன்றுகோலையே சிறு குழந்தையாக நினைத்து உங்கள் தந்தையார் இதற்குக் காப்பிட்டிருக்கலாமோ, என்னவோ?'' என்று நகையாடினாள் வசந்தமாலை. சுரமஞ்சரி பதிலுக்கு நகைக்கவில்லை. அவள் சிந்தனையில் ஆழ்ந்தாள். அந்த ஊன்றுகோல், அதன் பிடி, உள்ளேயிருந்த ஐம்படைத் தாலி யாவும் விடுபடாத புதிர்களாயிருந்தன அவளுக்கு. தந்தையாரும் நகைவேழம்பரும் கடற் பயணத்திலிருந்து திரும்புகிறவரை அந்தப் புதிர்களை விடுவிக்கும் தனது முயற்சிக்குத் தடையில்லை என்ற ஒரே ஆறுதல் மட்டும் அவளுக்கு இருந்தது.

## 5 - கொதிப்பில் விளைந்த குரூரம்

மணிபல்லவத்துக்குச் செல்லும் கப்பலைப் பின் தொடர்ந்து படகில் சென்ற நகைவேழம்பரை எதிர்பார்த்துச் சினத்துக் கப்பலின் தளத்திலேயே உச்சிப்போது வரை காத்திருந்தார் பெருநிதிச் செல்வர். பின்பு வெயிலின் கொடுமையைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் கீழ்த் தளத்துக்கு வந்து அங்கிருந்தபடியே நகைவேழம்பர் திரும்பி வருவதை எதிர் பார்த்துச் சில நாழிகைகள் காத்திருந்தார். கற்பூரக் கப்பலின் உள்ளே கமழ்ந்த நறுமணம் ஏதோ ஒரு பெரிய கோவிலுக்குள் இருப்பது போன்ற சூழ்நிலையை உண்டாக்கிற்று. வேறு ஒரு படகின் துணை கொண்டு கப்பலில் இருந்த கற்பூரம், பனி நீர், குங்குமம் முதலிய நறுமணப் பொருள்களை முழுவதும் பண்டகசாலைக்குள் இறக்கி முடிக்கும்போது

கதிரவன் மறையுந் தருணம் ஆகி விட்டது. நகைவேழம்பர் சென்றிருந்த படகு திரும்பி வருகிறதா என்று பார்த்துப் பார்த்துக் கண்கள் பூத்துப் போயிற்று அவருக்கு. மேலும் சிறிது நேரம் பொழுதைக் கடத்துவதற்காக அந்தக் கப்பலின் தலைவனுகிய சீனனோடு பேச்சுக் கொடுத்தார். அதில் சிறிது நேரம் கடந்தது.

மருள் மாலை நேரம் முதிர்ந்து மெல்ல மெல்லப் போது இருட்டியது. கடற் கரையிலும், துறைமுகத்திலும் தீபங்கள் தென்பட்டன. கலங்கரை விளக்குகளின் உச்சியில் நெருப்பு மூட்டினார்கள். கடலுக்குள் சென்றிருக்கும் பரதவர்கள் திரும்பி வருவதற்கு அடையாளம் போல் கரையோரத்துப் பெரு வீடுகளின் மாடங்களில் விளக்கு வரிசைகள் தோன்றின. பல்வேறு திசைகளின் நாடுகளிலிருந்து நீண்ட நாட்கள் கடற்பயணம் செய்து கரையடைந்திருந்த கப்பற்காரர்களின் களியாட்டங்கள் தொடங்கி வளரும் நேரமாதலால் அப்போது பூம்புகார்த் துறைமுகம் இரவில் கொலுவிருக்கும் பேரரசிபோல் பொலியத் தொடங்கியிருந்தது. கப்பல்களின் தளங்களில் இருந்து இனிய இசைக் கருவிகள் ஒலித்தன. களிப்பில் மூழ்குவோர் கூவும் ஆரவாரக் குரல்கள் துறைமுகப் பரப்பில் எங்கும் எதிரொலித்தன. நடன நங்கையர்கள் ஆடும் நளின பாத சரங்களின் இனிய ஒலிகள் எங்கும் கிளர்ந்தன. துறைமுகத்தின் எதிரே கடற்பரப்பில், தொலைவிலிருந்து வரும் ஒளிப்புள்ளிகளை 'இதுவாக இருக்குமோ, இதுவாக இருக்குமோ' என்று எண்ணி எண்ணி அநுமானம் செய்தபின் அவை ஒன்றுமே அதுவாக இல்லாததை அறிந்து ஏமாந்து கொண்டிருந்த பெருநிதிச் செல்வர் இறுதியில் சீனத்துக் கப்பல் தலைவனிடமிருந்து ஒருவாறு விடைபெற்றுக் கொண்டு பெருமாளிகைக்குப் புறப்பட்டு விட்டார். மணிபல்லவத்துக் கப்பலைத் துரத்திக்கொண்டு போன நகைவேழம்பர் திரும்பி வந்தால் அவரிடம் தான் பெருமாளிகைக்குப் போய் விட்டதாகக் கூறி அவரையும் அங்கு அனுப்புமாறு சொல்லி ஏற்பாடு செய்து விட்டுத் தாம்மட்டும் தனியாகவே திரும்பினார் பெருநிதிச் செல்வர்.

'இந்த அரைக் குருடனுக்காக இவ்வளவு நேரம் காத்திருந்ததே அதிகம். கப்பலில் வந்த களைப்புத் தாங்க முடியவில்லை. பெருமாளிகைக்குப் போய் உடலுக்கு இதமாகக் காய்ச்சிய தைலத்தைப் பூசிக்கொண்டு வெந்நீரில் ஆட வேண்டும். யாராவது ஒரு முரட்டு யவனப் பணியாளனைத் தைலம் தேய்த்து விடச் சொன்னால் பயணம் செய்துவிட்டுச் சோர்வோடு வந்த உடலுக்குப் பரம சுகமாயிருக்கும். வெது வெதுப்பாக ஆவி சுழலும் வெந்நீரில் குளித்துவிட்டு வயிறார உணவும் முடித்தால் இந்த உலகத்தையே விலையாகக் கொடுக்கலாம் போல் அவ்வளவு நல்ல உறக்கம் இரவில் வந்து கொஞ்சும். நன்றாக உறங்கிவிட்டு நாளைக்குப் பொழுது விடிந்ததும் மற்றவற்றைக் கவனிக்கலாம்! நகைவேழம்பர் திரும்பி வந்தாரா, வரவில்லையா என்பதைப் பற்றிக் கூட இனிமேல் நாளைக்குப் பொழுது விடிந்து கண் விழித்த பின்புதான் கவலைப்பட முடியும். வேறு எந்தக் கவலையும் குறுக்கிட்டு இன்று இந்தத் தூக்கத்தைக் கெடுத்து விடக் கூடாது. இன்று இப்போது நான் படுகிற கவலைகள் இரண்டே இரண்டுதான்.



ஒன்று நல்ல உணவு. இரண்டு ஆழ்ந்த தூக்கம். 'கவலைதான் உறக்கத்துக்குப் பெரும் பகை' என்று சுகபோகங்களைப் பற்றிய சுவையான சிந்தனையுடனே பெருமாளிகைக்குத் திரும்பியிருந்தார் பெருநிதிச் செல்வர். சொந்தச் சுகபோகங்களைப் பற்றிச் சிந்திப்பதற்குக் கூடத் தாம் தனியாயிருக்கும் போதுதான் அவருக்குச் சுதந்திரம். நகைவேழம்பர் கூட இருந்தால் சில பயங்களால் சொந்தச் சுகபோகங்களை நினைக்கக் கூடத் தோன்றாது அவருக்கு. தாம் சுகபோகங்களை ஆள முடிந்தவர்—என்றோ சுகபோகங்களுக்கு அதிபதி—என்றோ நினைப்புக்களை நினைத்துப் பெருமிதப் படுவதைக் கூட நகைவேழம்பர் தம் அருகிலிருக்கும்போது செய்வதற்குத் தயக்கமாகவோ அருவருப்பாகவோ இருக்கும் அவருக்கு. அதற்கு எத்தனையோ இரகசியக் காரணங்கள் இருந்தன. அவை பெருநிதிச் செல்வரே இரண்டாவது முறை சிந்தித்துப் பார்ப்

பதற்கு அஞ்சுகிறவை. இன்று நகைவேழம்பர் அருகில் இல்லாததனால் தம் சுகபோகங்களைப் பற்றிய நினைவு அவருக்கு வந்தது. மனிதர்களில் சிலர் பக்கத்திலிருந்தால் தாங்கள் அப்படி யார் பக்கத்தில் நிற்கிறார்களோ அவர்களுடைய சிந்தனையே சுதந்திரமாக வளராதபடி செய்து கொண்டிருப்பார்கள். பேய் பிடித்துக்கொண்டு ஆட்டுவதுபோல் பிறருடைய சிந்தனை தன்னிச்சையாக வளர முடியாமல் பிடித்துக் கொண்டு ஆட்டுகிற இத்தகைய மனிதர்களும் பேய்த்தன்மை பெற்றவர்களே. நகைவேழம்பரும் இப்படிப் பெருநிதிச் செல்வரைப் பேயாகப் பற்றிக் கொண்டு ஆட்டியவர்தான்.

இன்று இப்போது இந்த விநாடியில் அந்தப் பேய் தன் அருகில் இல்லை என்பதை உணர்ந்தபோதுதான் தாம் சற்றே சுதந்திரமாக இருப்பது போலத் தோன்றியது பெருநிதிச் செல்வருக்கு. சுதந்திரமாகத்தான் இருக்கிறோம் என்பதைத் தனக்குத்தானே நிரூபித்துக் கொள்வதற்காகவாவது தன்னிச்சையாய் எதையேனும் செய்து பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டார் அவர்.

ஒளிமிக்க கருங்கல்லில் செதுக்கிய மல்லனின் சிலைபோலிருந்த வலிய ஊழியன் ஒருவன் அவரை அமரச் செய்து மருந்துப் பொருள்கள் இட்டுக் காய்ச்சிய தைலத்தை உடம்பில் நன்றாக அழுத்தித் தேய்த்துவிட்டான். தம்முடைய உடம்பின் தசைத் தொகுதியை அந்த ஊழியனின் ங்கைகள் அழுத்திப் பிடித்துப் பிசையும்போது கடற் பயணத்தினால் ஏற்பட்ட சோர்வு பஞ்சாய்ப் பறந்து போனது போலிருந்தது அவருக்கு. வெந்நீரில் குளித்து முடித்த பின் விதம்விதமான வகைகளில் சுவையோடு சமைத்திருந்த உணவை உடனே தூக்கம் வந்து விடுவதற்கான பெருஞ் சோர்வு ஏற்படும்படி நிறைய உண்டார். கண்ணிமைகளில் வந்து கொஞ்சும் உறக்கத்தோடு பஞ்சணையில் போய் விழுந்தார். அதற்குப் பின்பு மறுநாள் போது விடிந்ததைக் கூட அவர் காணவில்லை. அவ்வளவு சுகமான உறக்கம்.

உறக்கம் கலைந்து அவர் கண் விழித்து எழுந்து பள்ளியறை வாயிலுக்கு வந்த போது பொழுது விடிந்திருப்பதுடன், எதிர்ப்புறமிருந்து எதிர்பாராத பகை உதயமாகித் தம்மை நோக்கி வந்து கொண்டிருப்பதையும் கண்டார்.

தீக்காயம் பட்டிருந்த முகமும் நடு நடுவே கசங்கிக் கடல் நீரில் நனைந்ததால் முடை நாற்றமடைந்து சில இடங்களில் கருகியிருந்த ஆடையுமாகப் பொழுது விடிந்ததனால் எங்கோ போய்விட்ட இருளே விடிந்ததைப் பார்க்கும் ஆசையோடு ஓர் உருவமாகி வந்ததுபோல் நகைவேழம்பர் எதிரே வந்து கொண்டிருந்தார். முற்றிலும் கனியாமல் காய் நிலைமை மெல்ல மாறிக் கனியத் தொடங்கியிருந்த நாவற்காய் போல் அவருடைய ஒற்றைக்கண் செக்கச் செவேலென்று கனன்று கொண்டிருந்தது. கடலில் நீண்ட தொலைவு நீந்தி வந்த துன்பம் அவர் நின்ற கோலத்திலிருந்தே தெரிந்தது.

முதல் நாள் இரவு தான் அநுபவித்த அற்பச் சுகங்களைப் பறித்துக் கொண்டு போக வந்த பூதம் போல எதிரே பாய்ந்து வருகிற இந்த இருளைப் பெருநிதிச்செல்வர் மருட்சியோடு பார்த்தார்.

எதிர்ப்புறமிருந்து இடி முழக்கம் கேட்டது. மின்னல் சீறியது. செங்காய் போலக் கனன்று மின்னும் ஒற்றைக் கண் பாயும் புலிப்பார்வை பார்த்தது. சொற்கள் ஊழிப் பெரும் புயலாய் ஒலித்தன.

''நான் சாகவில்லை! உயிரோடு பிழைத்துத்தான் வந்திருக்கிறேன்!... ஆனால் இப்போது என் நெஞ்சும் கைகளும் துடிக்கிற துடிப்பைப் பார்த்தால் யாரையாவது சாக வைக்க வேண்டும் போல் எனக்கு ஆசையாயிருக்கிறது. இப்போது என் உடம்பில் ஊறும் கொலை வெறியை எதைச் செய்தாவது நான் தணித்துக் கொண்டுதான் ஆக வேண்டும். நான் யாரையாவது கொல்ல வேண்டும். அல்லது என்னையே நான் கொன்று கொள்ள வேண்டும்!... என்ன சொல்லுகிறீர்கள், பெருநிதிச் செல்வரே?...''

பெருநிதிச் செல்வருக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. கண்கள் மட்டும் விரிய விரிய விழித்துக் கொண்டு எதிரே பயத்தோடு பார்த்தன.

சொப்பனம் கண்டதுபோல் சிறிது போதுக்கு மட்டும் வாய்த்திருந்த முதல் நாள் சுகங்கள் மறைந்த இடம் தெரியாது போக எதிரே வந்து நிற்கும் துன்பத்தை எப்படி ஆற்றி வழிப்படுத்த முடியும் என்று சிந்திக்கலானார் பெருநிதிச் செல்வர். கோபத்துக்குப் பதில் கோபம் என்கிற முறையில் தாமும் சீறினால் காரியம் கெட்டு விடும் என்று அவருக்குத் தோன்றியது. 'எதிரிகளை வெல்லும் தந்திரங்களில் தலையாய தந்திரம் எதிரி சீறும் போது நாம் பயப்படுவதுபோல் சிரித்துக் கொண்டே நிதானமாயிருந்து விடுவதுதான்! எதிரியின் கோபத்தைக்கூட அலட்சியம் செய்யவேண்டிய நிலையில் அப்போது இருந்தார் அவர். (தொடரும்)



வாழ்க. கோமதி — சதாசிவன்!

எங்கள் குமாரத்தி சி. சௌ. கோமதிக்கும், செகந்திராபாத் ரயில்வே டாக்டர் சி. எஸ். ராஜபகதூர் முதலியாரின் குமாரர் காப்டன் சி. ஆர். சதாசிவன் B. Sc., B. E. க்கும் அக்டோபர் 30-ந் தேதி சென்னையில் நடந்த திருமணத்திற்கு நேரில் வருகை தந்தும், பரிசுகளும் வாழ்த்துக்களும் அனுப்பிய உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் எங்கள் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இங்ஙனம்

திரு ஆ. கந்தசாமி முதலியார்
திருமதி ஆ. க. ராதாபாய் அம்மாள்
(கைலி வியாபாரம், மதராஸ்)

## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,
(நிறுவியது)

"வீணு விஹார்", 17-A, ஸயான் - மாதுங்கா எஸ்டேட்
(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)

Post Bag No. 6759. பம்பாய் – 22 தந்தி: "GROWRICH"

| 25 மாதங்கள் | குறுகிய கால ஏலச் சீட்டுகள்<br>2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள்<br>1961 டிஸம்பர் மாத ஸீரிஸ் | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

சேரக் கடைசி தேதி 9-12-1961 ... முதல் ஏலத் தேதி 10-12-1961

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ 1,250/- | I | ரூ. 10/- | ரூ. 250/- |
| F | ரூ. 25/- | ரூ. 625/- | | | |

### நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 9-12-1961 ... முதல் ஏலத் தேதி 10-12-1961

50 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| A | ரூ 100/- | ரூ. 5,000/- | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2,500/- | ரூ. 250/- |
| D | ரூ 20/- | ரூ. 1,000/- | ரூ. 100/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களை சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

வெள்ளிக்கிழமை (வார விடுமுறை நாள்)

வேலை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை: மாலை 4 முதல் இரவு 8 மணி வரை

(போர்டார் உத்திரவுப்படி எம். வி. சுப்ரமணியம் மானேஜிங் டைரக்டர்

தலைமை ஆபீஸ்: "பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்கராச்சாரி தெரு, தபால் பெட்டி நெ. 414 திருவல்லிக்கேணி, மதராஸ்-5

இதர கிளைகள்:
1. 185, முதல் மாடி, ஆறுவது கிராஸ், காந்தி நகர், பெங்களூர்-9
2. "கான்னன் ஹவுஸ்", 1/24, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி-1
3. "பாலுஸேரி பில்டிங்", 14-A/4, W.E.A. கரோல்பாக், புது டெல்லி-5
4. 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி-3
5. 48, லேக் பிளேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# சங்கு முழங்குது கேளீர்

எஸ். வி. எஸ்

"அறப் போர்விறல் யாவும் மறப் புறும் வரையும்.....கீர்த்தி கொள்" ராஜபுதனத்தைப் பற்றிப் பாரதியார் பாடியிருப்பது எவ்வளவு உண்மை என்பது ராஜாஜி அங்கு சுற்றுப் பயணம் செய்த போது சந்தேகமறத் தெரிந்தது. சுதந்திரக் கட்சியின் வழியாக ராஜாஜி தொடங்கியுள்ள அறப் போரில் ராஜஸ்தானம் அவ்வளவு ஈடுபாட்டுடன் அது பங்கு பற்றியுள்ளது.

ராஜஸ்தானப் பொது மக்கள் சுதந்திரக் கட்சியை ஆதரிக்கிறார்கள் என்றால் அதில் ஒரு விசேஷம் உண்டு. ராஜஸ்தானத்தில் முன்பிருந்த சுதேச சமஸ்தானங்களின் அரசர்களும் அவற்றில் முக்கியமான பதவிகளை வகித்தவர்களும் சுதந்திரக் கட்சியை ஆதரிக்கிறார்கள். ஏழைகளுக்காக முதலைக் கண்ணீர் வடிக்கும் காங்கிரஸ், பொது மக்களை இந்த வகுப்பினருக்கு எதிராகத் தூண்டிப் பிரிவினை செய்வதில் முனைந்திருக்கிறது. இருந்த போதிலும் பொது ஜனங்கள் சுதந்திரக் கட்சிக்கும், அதன் தலைவருக்கும் அங்கு அமோக வரவேற்பு அளித்தனர் என்றால் அது குறிப்பிட வேண்டிய சமாசாரம்தானே!

ராஜஸ்தானத்தில் நவ. 15-ந் தேதியன்று ராஜாஜியின் சுற்றுப்பிரயாணம் தொடங்கியது. அங்கு முதலில் சென்ற ஊர் பான்ஸ்வாடா என்பது. இது ரயில்வே ஸ்டேஷனிலிருந்து அறுபது மைல் தூரத்தில் உள்ள பட்டிக்காடாகும். ஆயினும் ராஜாஜியைக் காணவும், அவரது பேச்சைக் கேட்கவும் அங்கு பத்தாயிரம் மக்கள் கூடியிருந்தது அதிசயமாகும்.

மறு நாள் காலை டுங்கர்பூருக்குப் பிரயாணமானோம். டுங்கர்பூர் மகாராஜா லக்ஷ்மண் சிங்தான் ராஜஸ்தான் சுதந்திரக் கட்சியின் தலைவர். அவர் ஊருக்குச் செல்லும் வழியில் ஓர் ஆறு குறுக்கிட்டது. அதைப் படகில் கடந்தோம். இப்படி ரயிலிலும் காரிலும் படகிலும் ஆகாய விமானத்திலும் ஜீப்பிலும் சென்று பிரசாரம் செய்து வரும் ராஜாஜியின் துடிப்பையும் ஊக்கத்தையும் எண்ணிப் பார்க்கவே மலைப்புத்தான் உண்டாகிறது.

டுங்கர்பூர் போகும் வழியில் ஸாக்வாடா என்ற ஒரு சிறு முனிசிபல் டவுன். இங்குள்ள பத்து முனிசிபல் அங்கத்தினர்களில் ஒன்பது பேர் சுதந்திரக் கட்சியினர். இவ்விடத்தில் ராஜாஜி பேசுகையில் "கம்யூனிஸ்ட்களும் காங்கிரஸ்காரர்களும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள்தான். கம்யூனிஸ்டுகள் மக்களின் சொத்து சுதந்திரங்களைப் பகிரங்கமாகக் கொள்ளையடிக்க வேண்டும் என்கின்றனர். காங்கிரஸ்காரர்கள் ரகசியமாகத் திருடி எடுத்துக் கொள்ள வேண்டும் என்கிறார்கள். இவ்வளவுதான் வித்தியாசம்" என்றார்.

அன்று மத்தியானம் ஒரு மணிக்கு டுங்கர்பூர் வந்து சேர்ந்தோம். கூட்டம் மூன்று மணிக்கு ஆரம்பமாயிற்று. தெருவெல்லாம் தோரணங்கள் கட்டி ராஜாஜிக்குப் பிரமாதமான வரவேற்பு அளித்தனர். கண்ணுக்கு எட்டிய தூரம் மக்கள், ராஜஸ்தான முறையில் பச்சை, மஞ்சள், சிவப்பு ஆகிய வண்ண வண்ணத் தலைப்பாகை அணிந்து பக்தி சிரத்தையோடு அமர்ந்து ராஜாஜியின் ஒவ்வொருவார்த்தையையும் கேட்டனர்.

"வீட்டுக்குக் காவலாக ஒரு நாயை வளர்க்கிறோம். அந்த நாய் நாளடைவில் தன் முந்தையரான ஓநாயின் குணத்தைப் பெற்று, வீட்டில் உள்ள குழந்தைகளைக் கடிக்கவும் துன்புறுத்தவும் ஆரம்பித்து விடுகிறது என்றால் அதை அகற்றத்தானே வேண்டும்? அதே போல் காங்கிரஸ், மக்களின் நலன்களுக்குக் காவலனாக விளங்கும் என்று எண்ணி அரசாட்சியை அதனிடம் அளித்தோம். அதுவோ நாளடைவில் மக்களின் உரிமைகளையும், உடைமைகளையும் பறிக்கத் தொடங்கி விட்டது. இந்த நாயை விரட்டி விடுங்கள். இதோ நான் ஒரு நாய் வைத்திருக்கிறேன். அதைக் காவலாக ஏற்றுக் கொள்ளுங்கள். இது மாமிசத்தைத் தீண்ட மாட்டேன் என்ற விரதம் கொண்ட சைவ நாய். மக்களின் சுதந்திர வாழ்வில் தலையிடாதது. அதுதான் சுதந்திரக் கட்சி" என்று சொன்னார்.

டுங்கர்பூர் மக்கள் ராஜாஜி அமர்ந்திருந்த ஜீப்பைத் தொட்டுத் தொட்டுத் தங்கள் கண்ணில் ஒற்றிக் கொண்ட காட்சி கண்களைப் பனிக்க வைத்தது.

டுங்கர்பூரிலிருந்து அன்று மாலையே சரித்திரப் புகழ் பெற்ற உதயபூர் வந்து சேர்ந்தோம். ஏழு மணிக்கு மாபெரும் கூட்டம் ஆரம்பமாயிற்று.

"தானே ஜயம் பெற முடியும் என்று பேசிக் கொள்ளுகிறது காங்கிரஸ். நான் எழுப்பியுள்ள எந்த ஆட்சேபணைக்கும்

அது இதுவரை பதில் சொல்லவில்லை. எனினும் அது இவ்விதம் கூறுவதிலிருந்து தர்மம் தன் பக்கம் இல்லாவிடினும் இந்த ஏழை நாட்டில் பணத்தைக் கொடுத்து வோட்டுப் பெற்றுவிட முடியும் என்று அது நினைப்பது தெரிகிறது. பணம் கொடுத்து வோட்டு வாங்கிவிட முடியாது என்பதை மக்கள்தான் நிரூபிக்க வேண்டும். வறுமையும் கஷ்டமும் அந்தப் பணத்தை ஏற்றுக்கொள்ளத் தூண்டினால் வாங்கிக் கொள்ளுங்கள். ஆனால் மனச்சாட்சிப்படி உங்களுக்கு விருப்பமான கட்சிக்கு வோட்டுச் செய்யுங்கள். இப்படி ஏன் சொல்லுகிறேன் என்றால் காங்கிரஸ் ஏராளமான பணத்தைத் திரட்டிவிட்டது. அது செலவழிந்தே தீர வேண்டும். எனவே அது மக்களுக்குப் பயன்படட்டும். ஆனால் தவறான கட்சிக்கு வோட்டுச் செய்கிறவர்களின் ஒவ்வொரு வோட்டுச் சீட்டும் பாரத அன்னையின் நெஞ்சில் கூரிய அம்பாகத் தைக்கும் என்பதை நினைவில் கொள்ளுங்கள்'' என்றார் ராஜாஜி. அந்த உணர்ச்சியான வாசகம் அனைவரையும் உலுக்கிவிட்டது.

உதயபூரை விட்டு மறு நாள், 17-ந் தேதி ஜோத்பூர் வந்து சேர்ந்தோம். அங்கு ராமராஜ்ய பரிஷத் அங்கத்தினர்கள் உட்படப் பலர் ராஜாஜியை வரவேற்றனர். ஜோத்பூர் நகரசபையினர் அழகிய பூங்காவில் ராஜாஜிக்கு ஒரு வரவேற்பு அளித்தனர். பின்னர் ஊர் நடுவே பெரிய பொதுக்கூட்டம் நடைபெற்றது. ராஜாஜி சுமார் ஐம்பது நிமிடங்கள் பேசினார்.

''திருட்டு நடத்தியவனே 'திருடன், திருடன்' என்று கூச்சல் போட்டுத் தப்பித்துக் கொள்வது போல் பணக்காரர்களின் கட்சியான காங்கிரஸ் சுதந்திரக் கட்சியைப் பணக்காரர் கட்சி என்று கூறி ஏமாற்றம் செய்கிறது'' என்றார் ராஜாஜி.

நமது அந்நியக் கொள்கை உலகத்தின் பத்தாவது அதிசயமாகும் என்பதை இந்தக் கூட்டத்தில் அவர் ஆணித்தரமாக எடுத்துக் காட்டினார். ''இன்று ஒரு போர் நேரிட்டால் இதோ இங்குள்ள ஜோத்பூர் கோட்டையினால் நாம் காப்புப் பெற முடியுமா? நவீன ராணுவ உபகரணங்கள் பெருகி வரும் இந்நாட்களில் இந்திய சர்க்கார் விமானந் தாங்கிக் கப்பல் வாங்கி யிருப்பதும் இதற்குச் சமானமே'' என்று கூறினார்.

சமஸ்தானங்களில் அரசர்கள் ஆட்சி நிலவியபோது மக்கள் சந்தோஷமாக வாழ்ந்தார்கள். இப்பொழுது அந்த மன்னர்கள் காங்கிரஸ் ஆட்சியில் எல்லாம் ஊழல் மயமாகப் போவதைக் கண்டு சுதந்திரக் கட்சியில் சேர்ந்தால் ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள் அவர்களை நிந்திக்கிறார்கள்; பயமுறுத்துகிறார்கள். இது மிகவும் நன்றி கெட்ட செயலாகும். முன்னாள் மன்னர்கள் இன்று மீண்டும் பழைய சமஸ்தான உரிமையையா கோருகிறார்கள்? ஜனநாயக ஆட்சி முறையில் பங்கெடுத்துக் கொண்டு ஜனநாயக ஆட்சி முறையை நிலை நாட்டவே விரும்புகிறார்கள். இதனைக் கண்டிப்பது போன்ற துரோகம் வேறு இல்லை' என்று சற்றுக் கடுமையாகவே பேசினார் ராஜாஜி.

ராஜாஜியின் பேச்சை மொழி பெயர்த்து வந்த டுங்கர்பூர் முன்னாள் மன்னர் இவ்விடத்தில் உணர்ச்சி வசப்பட்டு விட்டார். அதைச் சமாளித்துக் கொண்டு அவர் பேசிய காட்சி அம்மன்னர்களின் மாண்பினைத் தெளிவாக எடுத்தியம்பியது.

18-ந் தேதி மாலை நாங்கள் ஜோத்பூரிலிருந்து புறப்பட்டுப் பாலியை அடைந்தோம். அங்குள்ள ஒன்பது பஞ்சாயத்து சமிதிகளில் எட்டு சமிதிகளின் முக்கியஸ்தர்களும் பாலி ஜில்லாவைச் சேர்ந்த சுமார் இருநூறு பஞ்சாயத்துக்களின் தலைவர்களும் ராஜாஜியின் உரையைக் கேட்கத் திரண்டு கூடியிருந்தார்கள்.

பாலி கூட்டத்தில் ராஜாஜி கூறினார்:

'' தரும வசனத்துக்கு ராவணன் செவி சாய்க்காத போது அவனை விட்டு விபீஷணன் பிரிந்தது போலவே நான் காங்கிரஸை விட்டு வெளியேறிவிட்டேன். இன்று காங்கிரஸை ஆட்சியிலிருந்து அகற்றிச் சுதந்திரக் கட்சியை ஆட்சியில் அமர்த்துவதே புண்ணியப் பணிகளுக்கெல்லாம் மேலான புண்ணியமாகும்'' என்றார்.

ராமாயண உதாரணத்திலிருந்து மகா பாரத மேற்கோளுக்கு வந்தார் ராஜாஜி, மறுநாள் பீவாரில் நடைபெற்ற கூட்டத்தில். பகல் வெயிலில் தலைவரைக் காணவும் அவர் பேச்சைக் கேட்கவும், இங்கு குழுமி யிருந்த பல்லாயிரக் கணக்கான மக்களை நோக்கி அவர் சொன்னார்: ''இன்றைய காங்கிரஸ் ஆட்சியாளர்கள் துரியோதனாதியரைப் போலத் திரவிய பலம் படைத்திருக்கிறார்கள். சுதந்திரக் கட்சிக்கோ பாண்டவர்களைப் போல் தரும பலம் இருக்கிறது. இந்த இரு கட்சிகளும் சந்திக்கப் போகும் குருக்ஷேத்திரம்தான் அடுத்த தேர்தல். யார் வெற்றி பெறுவார்கள் என்று பாராமல் கடமையை உணர்ந்து அதற்காகப் போராட வேண்டிய பாரத யுத்தமே இது. அதில் நீங்கள் கௌரவர்களை எதிர்க்கலாகுமா என்று

கலங்கும் அர்ஜுனனாக இருந்தால் நான் கண்ணனாக இருந்து உங்களை நல்வழியில் நடத்தி வைப்பேன். ஆனால் நீங்கள் அர்ஜுனனாக இருக்கப் பிரியப்படவே வேண்டும்'' என்று வெகு அழகாகக் கூறினார். 'தானே வந்து தலையளித்து ஆட்கொள்ளும்' இந்தத் தர்ம உபதேசப் பணியை ராஜஸ்தான் மக்கள் தள்ளிவிடுவார்களா என்ன ?

மகாத்மா காந்தியின் உடலைத் தகனம் செய்தபோதே காங்கிரஸ்காரர்கள் காந்தீயத்துக்கும் நெருப்பு வைத்து விட்டார்கள் என்று இந்தக் கூட்டத்தில் கூறினார் ராஜாஜி. மக்களின் விடுதலையைப் பறிமுதல் செய்யும் காங்கிரஸ் ஒவ்வொரு துறையாக வாயை வைத்து வருகிறது. மக்கள் சமயமறிந்து உஷாராக வேண்டும். இல்லாவிடில் குதிரை களவு போன பின் லாயத்தைப் பூட்டிய கதையாகும் என்று எச்சரித்தார்.

19-ந் தேதியன்று ஆஜ்மீரில் நடைபெற்ற கூட்டத்தில் பல்லாயிரக் கணக்கான மக்கள் குழுமியிருந்தது கண்கொள்ளாக் காட்சியாகும். ''முன்பு மூகலாயர்களிடமும், மேல்நாட்டாரிடமும் இந்த நாட்டை இழந்தோம். இப்போது மக்கள் கவனக் குறைவாக இருந்து விட்டால் இந்தியாவை கம்யூனிஸ்ட்டுகளின் வசமாக்கிவிடுவோம்'' என்று இந்தக் கூட்டத்தில் எச்சரித்தார் ராஜாஜி.

இருபதாம் தேதி யன்று நடுப்பகல் ஜயப்பூரைச் சென்றடைந்தோம். சுதந்திரக் கட்சியில் சேர்ந்து மக்கள் சபைக்குப் போட்டியிட விருக்கும் வீராங்கனை ஜயப்பூர் மகாராணி காயத்ரி தேவி மார்க்கத்திலேயே ராஜாஜியைச் சந்தித்தார். ஜயப்பூரில் நடைபெற்ற கூட்டத்துக்கு அரைலட்சம் மக்கள் திரண்டு வந்திருந்தனர். அங்கு காயத்ரி தேவி சத்தியம், தியாகம் இவற்றின் உருவகம் ராஜாஜி என்று போற்றினார். இந்தி மொழியிடம் ராஜாஜிக்கு வெறுப்பேதும் இல்லை யென்பதையும், பிற மொழியினர் மீது அது திணிக்கப்படுவதையே அவர் ஆட்சேபிக்கிறார் என்பதையும் அவர் தெளிவு படுத்தினார்.

காங்கிரஸ் ஆட்சியின் கெடுபிடிகளில் சிக்கியுள்ள முன்னாள் மன்னர் ஒருவரின் மனைவி எதிர்க் கட்சியில் சேருவதென்றால் அதற்கு உடன்கட்டை யேறுவதற்கு வேண்டிய துணிவு வேண்டும் என்று ராஜாஜி கூறினார். ''காயத்ரி தேவி மற்ற அரச குடும்பத்தினருக்கும் தனவந்தர்களுக்கும் ஒரு வழிகாட்டி. அவரை மற்றவர்களும் பின்பற்ற வேண்டும். காங்கிரஸை இன்று ஆதரித்து வரும் செல்வந்தர்கள் தங்களுடைய தற்கொலைக்கே வழி தேடிக் கொள்கிறார்கள் என்று நான் இங்கிருந்து பிரகடனம் செய்கிறேன்'' என்று ஆவேசத்துடன் கூறினார் ராஜாஜி.

''நேருஜி அதிகார பலத்தைப் பிரயோகிக்கத் தயங்குபவர். ஆனால் மற்றக் காங்கிரஸ்காரர்களுக்கு இவ்விதக் கூச்சம் கிடையாது. அவர்கள் தம்மை ஒரு கருவியாக்கிக் கொள்ள நேருஜி இடமளித்து விட்டார். தங்கள் எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்ள நேருஜியைப் பயன்படுத்திக் கொள்ளும் காங்கிரஸ்காரர்கள் அதே சமயம் தங்களுடன் பல்லாண்டு சேர்ந்திருந்த ராஜாஜியை இழந்து விட்டார்கள்'' என்று அவர் கூறியபோது தாம் அரும்பாடுபட்டு வளர்த்த காங்கிரஸிடம் அவருக்குள்ள பரிவும், இன்றைய அதன் நிலைமையைக் காணும்போது ஏற்பட்டுள்ள பரிதாபமும் புலனாயின.

பத்து லட்சம் டன் வெடி மருந்து படைத்த ருஷிய அணுகுண்டை மெகாடன் குண்டு என்கிறோமல்லவா? அதே போல் ஒரு மெகாடன் பொய்க் குண்டும் உண்டு என்று இந்தக் கூட்டத்தில் ராஜாஜி தமக்கே உரிய ஹாஸ்ய ரசனையுடன் கூறினார். 'சுதந்திரக் கட்சி பணக்காரர்கள் கட்சி' என்ற காங்கிரஸின் கூற்றுத்தான் இந்த மெகாடன் பொய் என்றார் ராஜாஜி.

காங்கிரஸ் ஸ்தாபனத்தையே விலை கொடுத்து வாங்கிவிடக்கூடிய கொழுத்த தனிகர்கள் பெர்மிட்டுக்காகவும், லைசென்சுக்காகவும், அதிகாரிகளுடன் பழகுவதற்குக் காங்கிரஸ் வழி செய்து விட்டது. இது நெருப்பையும் பஞ்சையும் ஒன்று சேர்த்து வைப்பது போன்ற விஷயம் என்றார் ராஜாஜி.

பண பலத்தைக் கொண்டு செல்வந்தர்கள் ஆட்சியாளரை வசப்படுத்திக் கொள்வதையும் அதே பண பலத்தால் ஆளும் கட்சியானது மக்களை மயக்குவதையும் இவ்வளவு அழகாக விண்டு உரைக்கும் ராஜாஜியின் கட்சியைப் பணக்காரர் கட்சி என்று கூறுவது எத்தகைய மடமை?

தனத்தால் ஆக வேண்டியது இக்கட்சிக்கு ஒன்றுமில்லை. ராஜாஜி மக்களின் மனத்தைத்தான் கேட்கிறார். அதனை முன்வந்து அளித்த ராஜஸ்தான் மக்கள் நல்லவர்கள்; புத்திசாலிகள்; தேச பக்தர்கள். 'ராஜாஜிக்கு ஜே' என்று கோஷமிட்டு ராஜஸ்தானத்தையே ராஜாஜி ஸ்தானமாக்கிய அந்தப் பெருமக்களுக்கு இதோ நாமும் போடுவோம் ஒரு ஜே!

# பெருமை

## எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

குளித்து வெளியே வந்த பிறகும் வெந்நீரின் சூடு உடம்பில் இதமாக உறைந்துக் கொண்டு தான் இருந்தது. ரகு கண்ணாடியின் முன்னால் நின்று தன்னையே ஒரு முறை பார்த்துக் கொண்டான். இடுப்பு வரை நறுக்கினாற் போலத் தெரிந்த பிம்பம். சரியாகத் துடைக்காத விசாலமான மார்பில் துளித்த நீர்த் துளிகள். எடுப்பான நாசி. நெற்றி மேல் கற்றையாகச் சரிந்த தலைமயிர்.

சீப்பை எடுத்து வாரி விட்டுக் கொள்ளத் தொடங்கினான். படிப்படியான மயிர் அலையாக அமைந்த விதம், அழகான முகத்துக்குத் தனியான கவர்ச்சி ஊட்டியது. பின்னால் பார்வதி நிற்பது கண்ணாடியில் தெரிந்தது. அவனுடைய தோற்றத்தில் லயித்து நின்ற பார்வை.

''டிபன் ஆறிப் போகிறது!''

நாற்காலிக்குப் பக்கத்தில் தட்டில் வைத்திருந்த சிற்றுண்டியையும் அவளையும் மாறி மாறிப் பார்த்து விட்டுத் துண்டை விசிறி மார்பைப் போர்த்திக் கொண்டான். அவள் காப்பி கொண்டுவர உள்ளே போய் விட்டாள்.

அவன் அது வரை சந்தித்துள்ள எத்தனையோ பெண்களில் ஒருத்தி பார்வதி. அவள் மட்டும் அவனோடு தங்கி விட்டாள், நிரந்தரத் துணையாக. சிறு வயதிலிருந்தே ஒன்றாக வளர்ந்தவர்கள்தாம். மாமாதான் அவனைப் படிக்க வைத்ததும். அந்த நாட்களில் அவன் அவளுக்குப் பாடம் கற்றுக் கொடுத்ததும் உண்டு. ஆனால் பாரு பாடம் மட்டும் கற்றுக் கொள்ளவில்லை. அவன் மனத்தையே படித்து விட்டாள். அதன் ஒவ்வொரு நேர நினைப்பும் மாறுதல்களும் அவளுக்குப் பாடமாகி விட்டன.

கல்லூரிப் படிப்பு முடியும்வரை மாமா பொறுத்துக் கொள்ளவில்லை. அவர் நிழலில் அவன் ஒதுங்கியிருந்த போதே பெண்ணை அவனுக்கு மணம் செய்து கொடுத்து விட்டார். தம்பூரின் சுருதியோடு இரகசியமாகக் கலந்து எழும் இசையைப் போல் அவன் வாழ்க்கையில் அவள் கலந்து விட்டாள்.

ஒவ்வொரு பருவத்திலும் நிழற் படமாக விழுந்து விட்ட எத்தனையோ நிகழ்ச்சிகள், அவன் மனத்தில் அவ்வப்போது தோன்றும். அவைகளில் பாருவின் உருவமும் இல்லாமற் போகாது. தோட்டத்தில் மரப் பொந்தில் இருவருமாகக் கண்டுபிடித்த அணில் குட்டி, மாமாவின் கட்டில் அடியில் பத்திரமாக வைத்துப் பால் கொடுத்த பூனைக் குட்டி, யாரும் கண்டு கொள்ளாமல் விட்டு விட்டு அவர்கள் பார்வையில் மட்டும் விழுந்த இலை மறைவில் குலுங்கிய ஒற்றைப் பூ ஆகியவைகளின் ஞாபகம் இப்போதும் அவன் நினைவுகளில் கொடி பின்னும். அப்போது அவனும் ஒரு குழந்தையாகி விடுவான்.

அவர்கள் இருவரில் அவனுடைய இடம் எப்போதுமே மேலேதான் இருந்தது. அவனுக்குத் தணிந்து போவதில்தான் அவளுக்குப் பெருமை. அவனுக்கும் பெருமைதான். அவளுடைய அபிமானத்தைக் கவர்ந்து நிற்கிறோமே என்கிற தனிப் பெருமைதான் அது. அதைத்தான் கர்வம் என்று சொல்லிவிடுகிறார்களோ?

இருக்கலாம். பெயரில் வெற்றி காணும் போது விளையும் பெருமிதம் வடிவெடுத்து மனத்தில் நிறையும் உணர்ச்சிதான் அது. கண்ணுக்குத் தெரியாமல் மாமரத்தின் உச்சியில் ஆடிய மாங்காயை ஒரே கல்லில் அடித்து வீழ்த்தியது; ஆற்றங்கரை மணலில் போட்ட சண்டையில் தோற்று விழுந்த எதிர்வீட்டுப் பையன், ''இருக்கட்டும். நாளைக்குப் பார்த்துக் கொள்கிறேன்'' என்று கறுவிக் கொண்டு போனபோது அவனை அலட்சியமாகப் பார்த்தது; கல்லூரியில் அவனுக்கு அடுத்த அறை மாணவன் அவனிடம் வந்து, ''நீ சொல்லிக் கொடுத்தால்தான் புரிகிறது'' என்று கெஞ்சும்போது அவன் பிரமித்து நிற்க மிக எளிதாகப் பாட விளக்கம் சொன்னது; மணி மணியான எழுத்தைப் பாராட்டிய நண்பனின் சகோதரி அவன் காதில் விழும்படி, ''எழுத்து மட்டுமா அழகாக அமைந்திருக்கிறது?'' என்று இழுத்தாற் போலக் கேட்டுவிட்டு நிறுத்தியது.

இப்படி எத்தனையோ சம்பவங்கள், தென்னங்கீற்றின் வழியே ஒளிப் பின்னல் மண்ணில் ஜாலம் செய்வது போல, மனத்தில் கோலமிட்டு நிற்கும். அவன் கர்வப்படுவதிலும் அர்த்தமில்லாமற் போகவில்லை என்று நினைத்துக் கொள்ளத் தோன்றும்.

அழகான தோற்றம், செறிந்த அறிவு, நயமான சுபாவம், விளையாட்டுக்களிலும், பொழுதுபோக்குகளிலும் தனியான திறமை, கவரும்படியாக அமைந்து விட்ட பேச்சு, எல்லாம் சேர்ந்து அவனை விட்டுப் பார்வை அகலாமற் பார்க்க வைத்த தருணங்கள் எத்தனையோ; அவன் எழுந்து போகும்போது அவன் பின்னே மறைந்து நின்ற பெருமூச்சுக்கள் அதற்குச் சாட்சிகள். பேசிக் கொண்டிருக்கும் போதே கவர்ச்சியில் மிரளும் கருவிழிகள், பிரமிப்பில் கன்னங்குழிந்த புன்னகைகள், அவனைப் பாராட்டும் புகழுரைகள் எல்லாம் அவனுக்கு அவன் மேன்மையைத் தான் நினைவுறுத்தின; மீண்டும் மீண்டும்.

விடியற்காலை நேரத்தில் தோளில் லெவலிங் பெட்டியும் கையில் அளவுத் தடியுமாகக் கம்பீரமாக அவன் சர்வே வகுப்புக்கு நடந்து போகும் போது அந்தப் பெண் அவன் பார்வையில் அடிக்கடி தென்படுவாள். உலாவ நடந்து வரும் தாத்தாவுக்குத் துணையாக, கையைப் பிடித்தபடி, காற்றில் குலுங்கும்

பூவைப் போலத் தரையில் பாதம் பட்டதோ என்று தோன்றும்படி. அவனைக் கடந்து செல்லும் போது ஓர் அடையாளப் பரிமாறல்.

கல்லூரி வாசக சாலையில் ஒவ்வொரு பீரோவாகப் புத்தகத்துக்காக அலைந்துகொண்டிருக்கும் பெண், அவனைப் பார்த்ததும் அவன் பின்னால் வந்து அவனை விசாரிக்கும் குரலில் தான் எத்தனை குழைவு? அவள் தேடும் புத்தகத்தைப் பற்றி மட்டுமல்ல, அவனுக்குத் தேவைப்படும் புத்தகத்தையும் பற்றி, அரை மணிக்கு மேல் பேசித் தீர்த்து விடுவாள்.

வெள்ளைச் சராயும், கலையாத வெள்ளைச் சட்டையுமாக டென்னிஸ் விளையாட இறங்கியதிலிருந்து, ஆட்டத்தில் வெற்றி கண்டு அவன் திரும்பும் வரை, அவனையே பார்த்துக் கொண்டிருந்து பந்தைத் தடுக்காமல் கோட்டை விட்டுக் கொண்டிருந்த பெண்ணும் அப்படித்தான். ஆட்டம் முடிந்ததும் அவனிடம் வந்து, 'கங்குராஜுலேஷன்ஸ்' என்று சொன்னதும், அவன் 'தாங்க்ஸ்' என்று திருப்பிச் சொல்லும் வேளையில், அவளே வெற்றியடைந்து விட்டதைப் போன்ற பெருமையில், பற்கள் வரிசையாகப் பளீர் வெண்மையுடன் பிரகாசிக்கும்.

அப்போதுதான் அவனுக்குக் கலியாணம் ஆயிற்று. பார்வதி அதிர்ஷ்டசாலிதான். கலியாணத்தின் போது எல்லாரும் பேசிக் கொண்ட பொழுது, அவன் காதிலும் விழுந்த குறிப்பு மட்டுமல்ல அது. அவனுக்கே மனத்தில் அப்படித் தீர்மானமான ஓர் அபிப்பிராயம். 'எத்தனை பேர்கள் எனக்காகக் காத்திருந்தார்களோ? இவள் இப்படி என்னைக் கைப் பழமாக எடுத்துச் சிரமப்படாமல், அடைந்து அனுபவிக்க, நான் இருப்பது அவள் அதிர்ஷ்டந்தான்' என்று தன்னைத் தானே முதுகில் தட்டிக் கொண்டு, தனக்குள்ளே எழும் பிரமிப்பில் களித்து நிற்பதில், ஒரு தனி மகிழ்ச்சி அவனுக்கு.



இப்படித் தான் ஏற்படுத்திக் கொண்ட மன நிலையில், தனக்கு நிகராகப் பாருவை மதிப்பிட்டுப் பார்க்கும்போது மனத்தில் மிகுந்து நிற்பது ஒரு வகை ஏமாற்றம்தான். அவளுக்கு அவன் கிடைத்த அளவுக்கு அவனுக்கு அவள் கிடைத்து விட்டது ஒரு பிரமாதம் என்று சொல்லிக் கொள்வதற்கில்லை. அதுவே ஒரு தனியான பெருமை. யாரும் அறியாத ஒரு புது விளையாட்டைத் தான் கண்டுபிடித்து விட்டதாக எண்ணி மகிழ்ந்து கொள்ளும் குழந்தையைப் போல, அவன் அதைத் தன்னந்தனியாக அனுபவித்துக் கொள்வான்.

அவனுடன் கூடவே காரியாலயத்துக்குப் பஸ்ஸில் வந்து இறங்கி, கையெழுத்துப் போட்டு உள்ளே போகும் வரை, பேச்சைப் பரிமாறிப் புன்னகை புரிந்தபடியே வரும் ஸ்டெனோ பாரதி சில சமயம் சொல்லியும் இருக்கிறாள், அந்த உணர்வுக்கு வெளிச்சம் ஏற்றி வைப்பது போல. குழல் போன்ற குரலில், இரட்டைப் பின்னல் வளைய வர, ''உங்கள் மனைவியை ஒரு நாளைக்குப் பார்க்க வேண்டுமே?'' என்று ஒரு நாள் கேட்டாள். 'உங்களுக்கு ஏற்றவள்தானா என்று நான் பார்க்கணும்!' என்ற பொருள் அந்த ஆர்வம் கலந்த கோரிக்கையில் தொனித்ததை அவன் கண்டுகொள்ளாமல் இல்லை.

ரயிலில் ஊரிலிருந்து பாருவுடன் வந்து கொண்டிருந்த போது ஒரு தடவை சிதம்பரத்தில் ஸ்டேஷனில் அவர்களைப் பார்த்து விட்ட சரளாவும் அதைப் போல் ஒரு கணம் நினைத்திருக்கத்தான் வேண்டும். ''என்னோடு கல்லூரியில் படித்தவர்'' என்று பாருவுக்கு அவனை அறிமுகம் செய்து வைத்த போது, ''இவர்தான் உங்கள் மனைவியா?'' என்று சொல்லி விட்டுப் பார்த்த பார்வையில், ஓரளவு பொருமையும், ஏக்கமும் தேங்கி நிற்பதை அவன் புரிந்து கொண்டான். பார்வதிக்கும் தெரியாமல் இருந்திருக்காது. இல்லாவிட்டால் கைகுவித்து அவள் செய்த புன்னகையில் ஏன் அத்தனை பெருமிதம்?

'இத்தனை பேர்கள் என்னைக் கண்கொட்டாமல் பார்த்துப் பிரமித்து நிற்க, நான் பார்வதியிடம் இவ்வளவு தூரம், மனத் தடுமாற்றமில்லாமல் நேர்மையாக ஒட்டி நிற்கும் கணவனாகப் பழகி வருகிறேனே? அது அவளுடைய பாக்கியம் இல்லையா?' என்று தனக்குள் பெருமைப்பட்டுக் கொள்வான்.

தூய வெண்ணிறப் படுக்கையில் குழந்தையைப் படுக்க வைத்துத் தூங்கச் செய்ய ஆரம்பித்து விட்டாள் பாரு. பக்கத்தில் முதல் வகுப்புப் பாட புத்தகம். வழுவழுப்பான காகிதம். பெரிய வண்ணப் படங்கள். அது வரை கண்டிராதது போல் அந்தப் படங்களை அவள் பிரமித்துப் பார்த்து வியந்து கொண்டிருந்தது, பார்க்க வேடிக்கையாக இருந்தது. அவனுக்கும் வேறு ஞாபகம்தானே?

அவர்களிடையே நின்ற உறவு விந்தையானதுதான். அதன் முழு உருவத்தைக் கண்டுகொள்ள அவனுக்குத் தீவிரமான முயற்சி இருந்ததில்லை. அவளும் அதைப் பொருட்படுத்தியதில்லை. இருவருக்கும் சம்







மதமான, பொதுவான அமைதி நிறைந்த குடும்ப வாழ்க்கை, எப்படியோ அவர்களி டையே அமைந்து விட்டிருந்தது. அது இரு வருக்கும் இடையே, எழுதி வைக்காமல், சொல்லிப் புரிந்து கொள்ளாமல், தானாகவே உண்டாகிவிட்ட ஒரு தொடர்பு என்றுதான் சொல்லலாம். இருவரும் உணர்ந்து கொண்டு விட்டதைப் போல ஓர் அனுபவம், அதன் பின் னணியாக அவர்களிடையே பரிமாறிக் கொள் ளும் புன்சிரிப்பு, ஆறுதலான இரண்டொரு வார்த்தைகள். இவைகளிலேயே அது எப் படியோ ஊன்றி வளர்ந்து விட்டது. அதற்கு ஒரு விளக்கம் காணும் ஆசை இருவருக் குமே இல்லை.

''பாரு!''

ஜன்னல் கம்பிகளின் மேல் சாய்ந்து அதன் விளிம்பின் வழியே பார்த்துக் கொண்டிருந்த வள், அவன் குரல் கேட்டுத் திரும்பினாள். மலர்ந்த புன்னகையில் யோசனை தயங்கியது.

''உன்னை ஒன்று கேட்கப் போகிறேன்'' என்று அருகே வந்து நின்றவளின் கைகளை எடுத்துக் கொண்டான்.

''சொல்லுங்கள்.''

''என்னை அடைந்ததைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

பளிச்சென்று அவன் அப்படிக் கேட்டுவிட் டது அவளுக்கு வெட்கமாக இருந்தது. ஆனாலும் மொட்டின் மலர்ச்சி போல்



முகம் பிரசன்னமாயிற்று. கண்கள் காணும் ஒளிபெற்றவை போல் ஆர்வத்தில் விரிந்தன.

''ஏன்? நான் என்னை அதிருஷ்டசாலி என்றுதான் நினைக்கிறேன்......எந்தப் பெண்ணும் அப்படித்தான் நினைத்திருப்பாள். என்னிடம் வந்து அந்த விதமாகப் பாராட்டியவர்கள் எத்தனையோ பேர்.''

அவள் முகத்தில் பெருமிதம் பூத்தது. புன்சிரிப்பில் கர்வம் இழை படர்ந்தது.

''என்ன?''

''உனக்கு நான் கிடைக்காமற் போயிருந்தால்—?''

''இதென்ன கேள்வி?''

''சொல்லேன்.''

''வேண்டாம். என் மனம் வேதனைப்படுகிறது. நான் வளர்ந்த சூழ்நிலையில் எவ்வளவோ வாலிபர்களோடு, பேசிச் சிரித்துப் பொழுது போக்கி யிருக்கிறேன். தெரிந்தவர்கள், உறவினர்கள், எத்தனையோ? கல்லூரியிலும்தான். கூடப் படித்தவர்கள், சொல்லிக் கொடுத்தவர்கள்....''

அவனுக்குத் தானும் சொல்லிக் கொடுத்த ஞாபகம் வந்தது. அவன் சிரித்ததை அவள் கவனிக்க வில்லை.

''ஆனால் உங்களைப் போல என் நெஞ்சின் நினைவில் கலந்தவர் வேறு யாரும் இல்லை. அந்த நினைவில் இருந்த புல்லரிப்பை வேறு எதிலும் அனுபவித்ததும் இல்லை. இன்னமும் அது அப்படியேதான் வளர்ந்து நிற்கிறது.''

''உனக்கு நான் கிடைக்காமல் போயிருந்தாலும் என்னை நினைத்துக் கொண்டிருந்திருப்பாயா பாரு?''

அவள் முகம் சுளித்தது. அவள் பதில் தயக்கமின்றித் திடமாக ஒலித்தது.

''ஒருகாலும் நினைத்திருக்க மாட்டேன்.''

அவன் முகம் விழுந்து போயிற்று. தன்னைப் பற்றிய நினைப்புப் பிடிபடாமல் சரிவதுபோல் தோன்றியது. அவனை ஒதுக்கி விட்டிருக்கக் கூடிய பாரு—

''ஏன்?''

''என்னை நீங்கள் இப்படிக் கேட்கலாமா? நான் சொல்லுவது சரி இல்லை. ஒரு பெண்ணாக இருந்தபோது நான் உங்களைப் பற்றி நினைத்திருக்கலாம். ஆனால் ஒரு மனைவியின் இதயத்தில் அவள் கணவனுக்குத்தான் இடம் உண்டு. உங்கள் தோற்றத்தை, திறமையைப் பார்த்துப் பூரிப்படைந்து நான் இன்று சந்தோஷப்படுகிறேனென்றால், அதற்கு நீங்கள் என் கணவராக இருப்பதுதான் காரணம். அதுவேதான் என் நினைப்புக்குப் பெருமை.''

அவன் மனம் பிகபிகத்தது. வாய் திறந்து பேசவில்லை. அவளிடம் அப்படி அதிகம் திறந்து பேசி விட்டது அவளுக்கும் ஏதோ வெள்ளம் வடிந்து விட்டது போலத்தான் இருந்தது. அவன் முகமாறுதலைக் கவனித்தவள், இதமாக ஏதோ சொல்ல விரும்பினாள். ஆனால் பேச முடியவில்லை.

அவன் மெதுவாக அவளைப் பெயர் சொல்லி அழைத்தான். அவன் மடிமேல் சோர்ந்திருந்த அவள் கைகள் அவன் பிடியில் குழைந்தன.

'இப்போது உண்மையாகவே எனக்கும் பெருமை பாரு, உன்னை மனைவியாக அடைந்ததற்காக!' என்று நினைத்துக் கொண்டான்.

# திருமூலர் தவ மொழி

ராஜாஜி - சோமு

34

இறைவனுக்குச் செய்யும் வழி பாடாகவே கருதி விருந்தோம்புகிற புண்ணியத்தைப் பற்றி மேலும் பாடுகிறார் திருமூலர்.

தண்டறு சிந்தை
 தபோதனர் தாம்மகிழ்ந்து
உண்டது மூன்று
 புவனமும் உண்டது

[தண்டறு சிந்தை—இடையீடு இல்லாது தொடர்ச்சியான தியானம். அத்தகைய தியானம் உடைய. தபோதனர்—முனிவர்கள், தாம் மகிழ்ந்து உண்டது — அந்த முனிவர்கள் உணவை மகிழ்ந்து உண்டால் அது. மூன்று புவனமும் உண்டது—மூன்று உலகமும் உண்டது போலவே ஆகும்.]

கொண்டது மூன்று
 புவனமும் கொண்டதுஎன்று
எண்டிசை நந்தி
 எடுத்துரைத் தானே

[கொண்டது—ஏற்றுக் கொண்டது. எண்டிசை நந்தி—எட்டுத் திசையும் நிறைந்த, அதாவது எங்கும் நிறைந்த எம்பெருமானாகிய நந்தி தேவன்.]

அந்தத் தபோதனர்கள் நம்மிடமிருந்து ஏதாவது ஏற்றுக்கொண்டால் அது மூன்று புவனத்து மக்களும் ஏகோபித்து நம்மிடமிருந்து ஏற்றுக் கொண்டதுபோல் அத்தனை பெரிய ஈகையாகும். இந்த உண்மையை எங்கும் நிறைந்த பெருமானாகிய நந்தி, குருவடிவிலே நின்று உபதேசமாகக் கூறியருளினான் என்கிறார் திருமூலர்.

தண்டறு சிந்தை
 தபோதனர் தாம்மகிழ்ந்து
உண்டது மூன்று
 புவனமும் உண்டது
கொண்டது மூன்று
 புவனமும் கொண்டதென்று
எண்டிசை நந்தி
 எடுத்துரைத் தானே

பக்தர்களுடைய பெருமையை இப்படியெல்லாம் பாடுகிற திருமூலர், சிவபெருமானுக்குத் தாம் ஆட்பட்ட தொன்மையையும் பாடியுள்ளார்.

என்தாயோடு என்அப்பன்
 ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக்கு
 எழுதிய ஆவணம்

[ஏழ் ஏழ்—ஏழாக விரிந்த ஜன்மங்கள். அதாவது பல பிறப்புக்களும். அன்றே—அநாதி காலமாகவே. ஆவணம்—பதிவு செய்த பத்திரம்.]

என் பிறப்புக்கள் அனைத்திலும் எனக்குத் தாயானவளும் தந்தையானவரும் சிவபெருமானுக்கு என்னை அடிமையென்று கொடுத்து விட்டார்கள். அந்த அடிமைப் பத்திரம் பிறக்கும்பொழுதே எழுதப்பட்ட சாசனமாகும் என்கிறார் முனிவர். இனி இந்த அடிமைப் பத்திரத்தை எழுதியது யார், அதில் சாட்சிக் கையெழுத்து இட்டது யார் என்று பாடுகிறார்.

ஒன்றாய் உலகம்
 படைத்தான் எழுதினான்

[ஒன்றாய்—ஒருசேர. உலகம் படைத்தான் — உலகங்கள் அனைத்தையும் படைத்த பிரமன்.]

உலகங்களையும் உயிர்களையும் படைத்த பிரும்மாதான் நான் சிவனுக்கு அடிமை என்பதைச் சாசனமாக எழுதினான்.

நின்றான் முகில்வண்ணன்
நேரெழுத் தாயே

[நேர் எழுத்து—நேரிலே அறிந்தவன் என்று கையெழுத்திடுகிற சாட்சி. முகில் வண்ணன்—மேகவர்ணனாகிய திருமால்.]

இந்த உலகங்களையும் உயிர்களையும் படைத்த பிரமன், தொடக்கத்திலேயே நான் சிவனுக்கு அடிமை என்று ஆவணம் எழுதினான். இந்த உலகங்களைப் பரிபாலித்து வருகிற காப்புக் கடவுளான திருமால் சாட்சிக் கையெழுத்திட்டான்.

என்தாயோ டென்னப்பன்
ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக்
கெழுதிய ஆவணம்
ஒன்றாய் உலகம்
படைத்தான் எழுதினான்
நின்றான் முகில்வண்ணன்
நேரெழுத் தாயே.

பிறவிகள்தோறும் நான் சிவபெருமானுக்கு ஜன்ம அடிமை என்று ஆவணம் எழுதியவன் படைப்புக் கடவுள் என்று சொல்லி, அந்தச் சாசனத்தின் தொன்மையையும் நிரந்தரத் தன்மையையும் கூறுகிறார். சாட்சிக் கையெழுத்திட்டவன், இந்த உலக வியவகாரங்களை நிர்வகிக்கிற திருமால் என்று சொல்லி, சாசனம் மாறுபாடில்லாமல் நடைபெற்று வருகிற ஒழுங்கைக் கூறுகிறார். இங்ஙனம் அடிமைப் பட்டதில் முனிவருக்குள்ள மகிழ்ச்சியைப் பாட்டிலேயுள்ள 'ஏ' கார ஒலி உணர்த்துகிறது.

என் பிறப்பின் பயன் இறைவனுக்கு அடிமை செய்வதே என்பதைச் சொல்லி அனைவருக்கும் அதுவே பொருந்தும் என்பதை உபதேசிக்கிறார் முனிவர்.

# 'அவரா லேசில் திருப்தியடைகிறவர்...'

'அதுவும் துணி விஷயத்திலா? அதெங்கே...' என்கிறார் பம்பாய்வாசியான ஸ்ரீமதி ஆர். ஆர். பிரபு. 'இப்போல்லாம் ஸன்லைட்டாலே வெளுக்கறேன் அவரோட துணிக எல்லாத்தையும். அவருக்கோ பெருமை! எனக்குந்தான். இருக்காதா? அமோகமா நுரைகட்டுது ஸன்லைட், தொட்டதெல்லாம் பளிச்சுன்னு வெளுப்பு. சலவைன்னு எனக்கு வேண்டியது ஸன்லைட்தான்!'

துணிகளைக் காப்பதற்குத் தூய, மென்மை வாய்ந்த ஸன்லைட் டைப் போல் வேறென்றில்லை என்பதே குடும்ப மாதர்களின் துணிவு. அதுவே உங்களுக்கும் இனிது.

# ஸன்லைட்




ஸன்லைட் அருமை -- நம் துணிகளுக்கு நன்மை!

30-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.



# பணம் பந்தியிலே

**காந்தன்**

படத்தின் தலைப்பை விளக்குவதற்காக, கதாநாயகன், கதாநாயகி, வில்லன், கதாநாயகியின் தந்தை ஆகிய எல்லோரும் அரும்பாடு படுகிறார்கள். பள்ளிக்கூடங்களுக்கும், அநாதை ஆசிரமங்களுக்கும், நிதி வழங்கியே நொடித்துப்போன சிங்கப்பூர் வியாபாரியான நல்லமுத்து மதிப்பிழந்து, மரியாதை இழந்து, சுகபோக வாழ்வை இழந்து ஒரு தொழிற்சாலையில் பாடுபடுகிறான். அவன் மாமன் மகள் சரளா மட்டும் அவனிடம் அன்பாயிருக்கிறாள். நல்லமுத்து அவளையும் விட்டுப் பிரிந்து அவதிப் படுகிறான். ஏழைப் பெண் கண்ணம்மா அவனுடன் துணை சேருகிறாள். சிங்கப்பூரில் நல்லமுத்துவிடம் மானேஜரா யிருந்த மாசிலாமணிதான் தொழிற்சாலை அதிபன் என்று அறிந்ததும் அவன் துடிக்கிறான். நல்லமுத்து நொடித்துப் போனதே மாசிலாமணியின் மோசடி வேலைதான் என்னும் காரணத்தினால் அவனிடம் நல்லமுத்து ஆத்திரம் கொள்கிறான். ஆனால் கடைசிக் காட்சியில் மாசிலாமணி உண்மையிலேயே மாசு இல்லா மணி என்னும் உண்மை வெளியாகிறது. படத்தின் அழுத்தமான 'சஸ்பென்ஸ்' அதுதான்.

எஸ். எஸ். ராஜேந்திரன்தான் நல்லமுத்து. பணக்கார மாமன் மகளைக் காதலிக்கவும் வறுமையில் ஆழ்ந்து அவளைக் கைவிடவும் தொழிற்சாலையில் போக்கிரிகளுடன் கைகலக்கவும் கடைசியில் நல்வாழ்வு பெறவும் திரைக் கதையில் சந்தர்ப்பங்கள் நிறையக் கிட்டுகின்றன. அவைகளைப் பயன்படுத்திக் கொண்டு நன்றாய் நடிக்கவும் அவர் தவறவில்லை. ஆனால் அவர் நடிப்பில் விசேஷமாகப் பாராட்டிக் கூறும் அளவுக்கு எதுவுமே இல்லையே! அவர் பிரமாதமாக நடிக்கும் கட்டம் வரும் வரும் என்று எதிர்பார்த்து ஏமாற்றமடைந்தேன். இதை ராஜேந்திரனின் குறையாகக் கூற முடியாது. திரைக் கதையிலேயே கதாநாயகனைவிட அவன் நண்பன் மாசிலாமணிக்குத்தான் நல்ல சந்தர்ப்பங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே கதாநாயகன் பாத்திரம் சுவையற்றுப் போய் விட்டது. மாசிலாமணி வரும் போது எல்லோருக்கும் ஒரே மகிழ்ச்சி உண்டாகிறது.

கண்ணம்மாவாக வரும் புஷ்பலதா நன்றாக நடித்திருக்கிறார். நொடிப்பும், நடிப்பும், நடனமுமாக ஜமாய்த்துத் தள்ளியிருக்கிறார்.

மாசிலாமணிதான் கதையின் முக்கியமான பாத்திரம்; திருப்பங்களுக்கும் 'சஸ்பென்ஸ்'களுக்கும் முழுக் காரணமா யிருக்கும் பாத்திரம்; படத்தைப் பார்க்கத் தூண்டும் பாத்திரம். எம்.ஆர். ராதா அந்தப் பாத்திரத்தை ஏற்று நல்ல நடிப்புக்கும் தகுந்த பாத்திரமாகத் தம்மை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார். சாதாரணமாக எல்லாப் படங்களிலும்

வில்லன் பொல்லாதவனுகத்தான் இருப்பான். பொல்லாதவன்தானே வில்லனாக இருக்க முடியும்? ஆனால் இந்தப் படத்தில் கதாநாயகனை விட வில்லன் நல்லவன்; கதாநாயகனுடைய நல்வாழ்வுக்காக அவன் சொத்துக்களைப் பாதுகாத்து வைக்கிறான். எம். ஆர். ராதா மிக நன்றாக நடித்திருக்கிறார். முக பாவங்கள் பிரமாதமாக இருக்கின்றன. பிச்சைக்காரர்களை அழைத்து வந்து அவர்களுக்கு வேலை கொடுக்க நினைக்கும் மாசிலாமணிக்குக் கிடைத்த ஏமாற்றம் உலகத்தில் நடக்கும் உண்மை நிலையை விளக்குகிறது. உழைக்காமல் சோம்பேறியாகவே வாழ்ந்து உண்டு உறங்க விரும்பும் நம் நாட்டுப் பிச்சைக்காரக் கும்பல்களின் இயல்பைக் காணும் எவரும் வியக்காமல் இருக்க மாட்டார்கள்.

இப்படிப் பல கருத்துக்கள், சம்பவங்கள் சுவையாக அமைந்திருந்தாலும் கதையை முழுமையாகப் பார்க்கும்போது மெச்சிப் பாராட்டும்படியாக எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லையே! மாசிலாமணியின் பாத்திரம் உருவான அளவுக்குக் கதாநாயகன் நல்ல முத்துவின் பாத்திரம் உருவாகாதது மிகவும் துரதிர்ஷ்டம் என்றுதான் கூறவேண்டும். சரஸாவின் தங்கை சாந்தாவும், அவள் காதலன் சுந்தரும் 'ஏதோ வரவேண்டுமே' என்று வந்து போவதுபோலத்தான் தோன்றுகிறது. அதாவது அந்தப் பாத்திரங்களுக்கு முக்கியத்துவம் இல்லாமற் போய் விடுகிறது.

கதையிலுள்ள முக்கியமான குறையைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. பணக்காரரான சரஸாவின் தந்தையினால் விரட்டியடிக்கப்பட்ட நல்லமுத்து சரஸாவையும் வெறுத்த பிறகு கண்ணம்மாவுடன் நெருங்கிப் பழகி......''நல்ல நிலவைக் கண்டால் கடலும் பொங்கிப் பெருகுது—நானும் நம்ம நெஞ்சுக்குள்ளே காதல் வளருது'' ... என்று ஆடிப் பாடி ஆனந்தமடைகிறான்; ஆனால், சரஸா இன்னும் தன்னை மறக்கவில்லை என்பதை அறிந்ததும் கண்ணம்மாளிடம், ''உன்னிடம் நான் சகோதர பாசத்துடன் தான் மனம் விட்டுப் பழகினேன். என் உள்ளத்தில் சரஸா ஒருத்திக்குத்தான் இடம்'' என்கிறான். இதுமாதிரி அசட்டுத்தனம் எத்தனையோ



தமிழ்ப் படங்களில் சாதாரணமாக நிகழ்கின்றமையினால் இதுபற்றி ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். ஒரே உதிரத்தில் உதித்து உத்தமமான அன்பினால் பிணைக்கப்பட்டிருக்கும் அண்ணன் — தங்கை உறவை உதாசீனம் செய்து கீழ்ப்படிக்குக் கொண்டு வந்துவிடுவது வருந்தத் தக்கது. உண்மையாகவே 'சென்ஸார்' செய்யவேண்டிய பகுதி இதுதான். சினிமாப் படங்களினால் தீமையே விளைகிறது என்னும் பெரியோர்களுடைய வாக்கை மெய்ப்பிப்பதாக இருக்கிறது இத்தகைய காட்சி. ஒளிப்பதிவு, காட்சி அலங்காரங்கள் ஆகியவற்றில் காட்டும் சிரத்தையில் ஆயிரத்தில் ஒரு பங்குகூடக் கதையில் காட்ட மாட்டேன் என்கிறார்களே! திரும்பத் திரும்பப் பார்த்த காட்சிகளே வந்து நம் கழுத்தை அறுக்கின்றனவே!

சரஸாவாக வரும் விஜயகுமாரி நன்றாய்த்தான் நடிக்கிறார். ஆடிப் பாடிக் காதலித்துக் கண்ணீர் விட்டுக் கலங்கித் தவியாய்த் தவிக்கிறார். முதலில், ஒரே குதூகலமாகத்தோன்றி வானம்பாடியாய்ச் சிறகடித்துப் பறந்து திரிந்து விட்டுப் பிறகு படத்தின் பிற்பகுதியில் வாடிய முகத்துடன் காதலனுக்காக வருந்துவது நன்றாயிருக்கிறது. ஆனால் அவர் நடிப்பில் பல படங்களில் நடித்து நல்ல அநுபவம் பெற்றும் வளர்ச்சியின் மெருகு இல்லையே!

சிறிது அதிகமாகவே சத்தம் போட்டாலும் பாண்டுரங்கம் பிள்ளையாக வரும் வி. கே. ராமசாமியின் நடிப்பு நன்றாக இருக்கிறது.

திரைக் கதையில் சாரமோ, புதுமையோ இல்லாததால் நடிக, நடிகைகளின் நடிப்பிலும் சுவையைக் காண முடியவில்லை.

ஏ. கருணாநிதி பணக்காரனாகி மாமன் மகளை மணக்கும் அந்தஸ்தைப் பெறுவது வெறும் அசட்டுக் கேலிக் கூத்தாயிருக்கிறது.

பாடல்களைப் பற்றிப் படாதிபதி கவலைப் பட்டதாகவே தெரியவில்லை. அது விஷயமாகக் கவலைப்படுவதற்கென்றுதான் படம் பார்ப்பவர்கள் இருக்கிறார்களே என்று சும்மா இருந்து விட்டார் போலும்!

அடிபட்டு மயக்கமுற்ற நல்லமுத்து ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறுகிறான். அச்சமயம் அவசரமாக அங்கு வந்த மாசிலாமணி டாக்டரிடம் பணம் தந்து ரகசியம் பேசுகிறான். அது பின்னால் நல்லபடியாக முடிந்தாலும் டாக்டருக்கு லஞ்சம் கொடுப்பது அந்தத் தொழிலுக்கே இழுக்குக் கற்பிக்கிறது. அது தவிர்க்கப்பட்டிருக்கலாமோ என எண்ணுகிறேன். சமூக வாழ்வில் ஒரு டாக்டருக்கு மிகவும் அந்தஸ்தான இடம் உண்டு. பண்பில் உயர்ந்து, அன்பில் சிறந்து விளங்க வேண்டியவர் டாக்டர். உண்மையில் பல டாக்டர்கள் பணத்தில் கருத்தாயிருந்தாலும், அவர்களைக் குணத்தில் உயர்த்திக் காட்டுவதுதான் நியாயம். மக்கள் உள்ளத்தில் எந்தக் கருத்தையும் பசுமரத்தாணி போல் பதிய வைப்பதற்குச் சினிமா சிறந்த சாதனம். வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்கு வழிவகுத்துத் தரும் நல்ல கருத்துக்களைத் திரைக் கதைகளில் எடுத்துக்காட்டினால் மேற்படி சிறந்த சாதனத்தை நல்ல முறையில் பயன்படுத்தியிருக்கிறார்கள் என்று கருதி யாரும் மகிழ்ச்சியடைவார்கள்.

ஆரம்பத்தில் குழப்பமாயிருக்கிறது; 'இடைவேளை'க்குப் பிறகு படம் வேகமாகப் போகிறது. கடைசியில் சப்பென்று முடிந்து விடுகிறது. ஆனால் படத்தை அழுத்தமான 'சஸ்பென்ஸ்' காப்பாற்றுகிறது.

லிப்டன்

# லாவோஜி டீ




சிக்கனத்தின்
சின்னம்
சிறப்பின் சிகரம்

# அன்பே ஆரமுதே

## அத்தியாயம் முப்பத்தைந்து

குருசாமி வந்ததும் சந்திரா புறப் படக் கிளம்பின ளல்லவா? இன்னும் டொக்கி வராததைக் கண்டு, "குரு சாமி, கீழே இருக்கு பாரு, அந்தப் பொண்ணு, அதை மேலே வரச் சொல் லேன்" என்றார் அனந்தசாமி.

அரை நிமிடத்துக்குள் வந்து விட் டான் டொக்கி.

"என்ன, மாமா?"

"சந்திரா, வீட்டுக்குப் புறப்பட்டு விட்டாள். உன்னிடம் சொல்லிக் கொள்ள வேண்டாமா?"

"அதுக்குள்ளேயும் புறப்பட்டாகி விட்டதா?"

"ஆமாம். நீ கேட்கிறதைப் பார்த் தால் நீ இங்கேயே இருக்கிறவள் மாதிரி யல்லவா இருக்கிறது? நீ புறப்படவில் லையா? உன்னை வீட்டில் கொண்டு விட்டுப் போகி றேன்."

"பரவாயில்லை, மாமி."

"மாமியா? சீ!...எங்கே வீடு?"

"அங்கே."

"அங்ங்ங்கே என்றால்? எங்ங்கே?"

"மயிலாப்பூருக்கும் அந் தண்டை."

"அடையாறு?"

"இல்லை."

"சாந்தோமா?"

"இல்லை."

"எங்கே என்று சொல் லேன். மாயவரம் கூட மயிலாப்பூருக்கு அந்தப் புறம்தான் இருக்கிறது."

"மந்தைவெளி."

"அப்பா, இதைச் சொல் லவா இத்தனை கேள்வி? நான் உங்கள் வீட்டுக்குச் சாப்பிட வந்து விடுவேன் என்று நினைத்துப் பயந்து விட்டாயா?"

"நீங்கள் பேஷாக வந்து சாப்பிட லாம். சாப்பாடு இருக்கிறது. உட் கார்ந்து சாப்பிடத்தான் இடமில்லை."

"கையில் வாங்கி வாசலில் நின்று சாப்பிடலாமோ இல்லையோ?"

"இல்லை. மாமி, வேண்டாம்.

"எங்கள் வீடு மூக்கோட்டை. அந்த மூக்கோட்டை இருக்கிற தெருவுக்கு வரு வதற்கே மூக்கைப் பிடித்துக் கொண்டு வர வேண்டும். வேறு வீடு மாற்றப் போகிறோம். அப்பொழுது உங்களை நானாக உங்களுடைய வீட்டுக்கு வந்து அழைத்துப் போகிறேன்."

"ஆக நீ வந்து கூப்பிட வருவாய் என்னை!"

"நிச்சயமாக."

"கூப்பிட வர வேண்டாம். வீடு எப்பொழுது கிடைக்கிறதோ! வெறு மனே வாயேன்."

"வருகிறேன்."

"எப்பொழுது?"

"ஆட்டம், சாதகம், சமையல் — எல்லாம் முடிந்து கை ஒழியணும். அம்மா வேறு இப்பத்தான் டைபாய்ட் வந்து கண்ணை விழித்திருக்கிறாள். அவள் பல மாக நடமாட ஆரம்பிக்கணும்."

"இப்ப யார் பார்த்துக் கொள் கிறார்கள்?...."



தி. ஜானகிராமன்




''திறந்த பின்னையல்லவா விழுங்கி யிருக்கிறீர்கள். அதை எடுக்காவிட்டால் ரொம்ப ஆபத்தாச்சே!''

''ஏன்? அந்தப் பின்னை அப்படியே மூடிவிடக் கூடாதோ?''

''அப்பா இருக்கிருர். அவர் ஊருக்குப் போய் விடுவார் ஐந்தாறு நாட்களில். அப்புறம் ஒரு வாரம் நான்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். இன்றைக்கு அப்பா கூடமாட இருந்து பார்த்துக் கொள்வார்.''

''என்ன, மாமா! இவளும் என்னைக் கூப்பிட மாட்டாளாம். வரவும் மாட்டாளாம். எப்படியிருக்கிறது?''—என்ருள் சந்திரா அனந்தசாமியிடம்.

''சரி, இப்பொழுது வாயேன். கொண்டு விட்டுப் போய் விடுகிறேன். உங்கள் மூக்கோட்டைக்குள் இறங்காமலேயே போய் விடுகிறேன்.''

''பரவாயில்லை. அப்பா சாயங்காலம் வந்து அழைத்துப் போவார். மாமாவுக்கும் ஒருவர் பேச வேண்டுமே.''

''பேசவா? இதுதான் மாமாவைத் தொந்தரவு செய்யாமல் இருக்கிற அழகா?''

''தவறிச் சொல்லி விட்டேன். குடியிருக்கிற பாட்டி எத்தனை தடவைதான் படி ஏறி இறங்குவாள். ஒரு நாளாவது அவளுக்கு ஒத்தாசையாக இருக்கலாம் என்று பார்த்தேன்.''

''சரி, உன்னைப் பார்த்துக் கொள்கிறேன் இரு....மாமா, நீங்கள் இவளை அழைத்து வந்தால்தான் உண்டு. வரட்டுமா?'' என்று கிளம்பினுள் சந்திரா.

''சரி.''

''வரேங்க'' என்ருன் குருசாமி.

''சரிப்பா. வேறு ஒன்றும் விசேஷமில்லையே சந்திரா! அம்மா, மாமா எல்லாரும் சௌக்கியம்தானே!''

''சௌக்கியம்தான். மறந்தே போய் விட்டேன். ருக்மிணி மாமி டில்லி வேலையை ராஜினமாச் செய்து விட்டாளாம். இன்று சாயங்காலம் கிராண்ட் டிரங்கில் டில்லியிலிருந்து புறப்படுகிருளாம். இங்கே அவளுக்குக் கல்லூரியில் வேலையாகி விட்டது—வரட்டுமா?''

''வாம்மா.''

வாசல் வரையில் அவளைப் பின் தொடர்ந்து, அவள் காரில் ஏறும்வரை பார்த்து விட்டு வந்தாள் டொக்கி.

''யாரு, மாமா இது?'' என்று கேட்டாள் மாடிக்கு வந்தவுடன்.

''இத்தனை நேரம் பேசி விட்டு யாரு மாமா என்கிருயே?''

''என்ன பேசினேன்? உங்களுக்கு வேண்டியவர்கள். மாம்பலத்தில் வீடு. காலேஜில் படித்துப் பட்டம் பெற்று வேலையில் இருக்கிருள். அவ்வளவு தானே தெரியும்? மற்றதெல்லாம் அவளுக்கு நேராகவே உங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள முடியுமா?''

''அது சரி. எனக்கு ரொம்ப நாட்களாகத் தெரிந்தவர்கள். அதுதான் மருந்து நான் கொடுத்து வருகிறேன். சந்திராவுக்கு அம்மாதான் இருக்கிருள். அப்பா இல்லை. மாமா வீட்டோடு இரண்டு பேரும் இருக்கிருர்கள். மாமாவுக்குச் சம்சாரம் கிடையாது. இறந்து போய் விட்டாள். அவர் பிள்ளை சீமைக்குப் படிக்கப் போனவன் அங்கேயே ஒரு வெள்ளைக்காரப் பெண்ணைக் கலியாணம் பண்ணிக் கொண்டு லண்டனுக்குப் பக்கத்தில் எண்ணுயிரம் பவுனில் ஒரு சிறிய வீடாக வாங்கிக் கொண்டு இங்கிலாந்துக் குடியாகவே ஆகி விட்டான். மாமாவுக்கு வேறு யாரும் மனிதர்கள் இல்லை. தங்கையும் மருமகளும்தான் எல்லாம். அவர் நாட்டுக் கோட்டைச் செட்டியாரிடம் ஏஜண்ட். அவர் சொத்து முழுதும் நிர்வாகம் பண்ணுகிருர். இன்று கல்கத்தாவில் இருப்பார். நாளைக்குச் சிங்கப்பூரில் இருப்பார். மறு நாளைக்கு மறு நாள் பம்பாயில் இருப்பார். வாயில் ஈப் புகுந்தது தெரியாமல் அலேவார். போதுமா? வேறு ஏதாவது தெரிந்து கொள்ள வேண்டுமா?''

''இவளைக் கண்டால் ரொம்பப் பிடித்துப் போய் விட்டது, மாமா எனக்கு.''

''அவளுக்கும் அப்படித்தான் என்று தோன்றுகிறது.''

''இல்லை, மாமா! முகத்தில் அடித்தாற் போலப் பேசி விட்டேன். அவ

ளுக்கு வருத்தமாக இருக்கும். நீங்கள் தான் காரணம்.''

''நானு?''

''ஆமாம். கலியாணம், கலியாணம் என்று என் வாயைக் கிளறி விட்டீர்கள். அவனும் கேலி செய்கிறாற் போலப் பேச ஆரம்பித்தானா? எனக்கு வேண்டியிருக்கவே இல்லே, இந்தக் கலியாணப் பேச்சு. சட்டென்று அதைச் சொல்லியும் விட்டேன். ஏதாவது தவறாக நினைத்துக் கொண்டிருப்பாள்.''

''போகும் போது ரு விட்டாற்போல் போக வில்லேயே. சிரித்த முகமாகத் தானே போகிறாள். உன்னைக் கூடக் கொண்டு விடுகிறேன், வீட்டுக்கு வா என்றெல்லாம் சொல்லி விட்டுப் போனாளே.''

''இருந்தாலும் நான் 'வெடுக்' என்று சொன்னது சொன்னதுதானே! அது சரி. கலியாணம் கலியாணம் என்று என்னை நிமிண்டினாளே அவள், உங்களோடு சேர்ந்து கொண்டு. இவன் சேதி என்னவாம்! இவனுக்குக் கலியாணம் ஆகி விட்டதா?''

''நீதான் அவன் கழுத்தையும் அவள் கால் விரலையும் துளைத்துத் துளைத்துப் பார்த்து ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருந்தாயே.''

''ஆமாம், மாமா''

''என்ன ஊகித்தாய்?''

''கால் விரலில் உருட்டு இல்லே. ஆனால் இந்தப் பட்டணத்தில் கலியாணம் ஆன பல பெண்கள் உருட்டுப் போட்டுக் கொள்வதில்லே. அது கர்நாடகம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.''

''இருக்கலாம். கழுத்தைப் பார்த்தாயே.....''

''கழுத்தில் கயிறு இல்லே. ஆனால் சங்கிலியிலேயே திருமங்கலியம் தொங்குகிறதோ என்னவோ? கயிறு முடிச்சை விடத் தங்கம் கெட்டி என்று அதைப் போட்டு அவள் கழுத்துக்குத் தும்பு மாட்டியிருந்தால்?''

''மாட்டுகிறதாகத்தான் வந்தான் ஒருத்தன். அந்தச் சமயத்துக்கு இன்னொரு பெண் வந்து விட்டாள். இவளே விட அவள் அழகு என்று தோன்றியது. அவள் கழுத்தில் மாட்ட அலேந்து கொண்டிருக்கிறான்.''

''அப்படியா? யாரு அவன்? யாரு அந்தப் பெண்?''

''பெண் உன் மாதிரிதான் என்று வைத்துக் கொள்ளேன். குலஊமா என்று பெயர் அந்தப் பெண்ணுக்கு.''

''குலஊமாவா?'' என்று வியந்தாள் டொக்கி.

''ஆமாம். நன்றாக ஆடுவாளாம். பாடுவாளாம். திருவொற்றியூர் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு போய் 'நான் உன்னைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறேன். அதற்காக, உன் எழில் கரம் பற்றுவதற்காகத் தியாகேசர் மாதிரி எதையும் தியாகம் செய்வேன்' என்கிற மாதிரி சொன்னாளும்....''

'' அந்தக் குலஊமா என்ற டொக்கி யிடமா சொன்னான்?''





''சொன்ன தாக நீதான சொன்னாய்.''

''என்ன மாமா இது?''

''என்ன?''

''ரங்கனா? நம்ம ரங்கனா!''

''அவளுடைய ரங்கன்.''

''என்ன அநியாயம் மாமா இது!''

''நியாய அநியாயம் எங்கே வந்தது இதில்! பல மாதங்கள் சுற்றிச் சுற்றி வந்தான். நெருங்கிப் பழகினான்..... சேர்ந்தே போனான். பீச்சுக்கு, சினிமாவுக்கெல்லாம் அழைத்துப் போனான். நிச்சயதார்த்தம் என்று நடக்கவில்லையே தவிர, நிச்சயமாகி விட்டது என்றுதான் அம்மா, மாமா, கார் ஓட்டுகிறவன், தோட்டக்காரன் எல்லாரும் நம்பிக் கொண்டிருந்தார்கள். ஆனால் தனக்கு ஆசை இல்லை என்று கடைசியில் தெரிந்து கொண்டு விட்டான்.''

''குஸுமாவையும் இப்படியே அழைத்துக் கொண்டு போய், ஊருக்கெல்லாம் நம்பிக்கை ஊட்டிக் கடைசியில் ஆசை இல்லை என்று தெரிந்து கொள்ளப் போகிறார். இல்லையா?............ஆனால் எனக்குத்தான் ஆசையில்லை. கொஞ்சம் நஞ்சமிருந்தாலும் இத்தோடு.....இத்தோடு....''

முடிக்காமல் உருட்டி ஒரு விழி விழித்தாள் டொக்கி. கைவிரல்கள் மடங்கிக் கொண்டன.

''அதனால் ஆசையே யில்லை என்று ஆகிவிடுமா?'' என்றார் அனந்தசாமி.

''ஏன் ஆகக் கூடாது? சரி, எப்படி ஆனால் எனக்கென்ன?''

''ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?''

''நான் கலியாணமே பண்ணிக் கொள்ளப் போவதில்லை. தப்பித் தவறி அந்த ஆபத்து வந்தாலும், இந்த மாதிரி தியாகேசன் உடுப்போடு, கரையேற்ற வருகிறவர்களைத்தானா பண்ணிக்கொள்ள வேண்டும்? அதுவும் தாய் தகப்பனாரை மட்டுமில்லாமல் இன்னொரு பெண்ணைத் தியாகம் செய்து விட்டு வந்தவர்களையா...?''

டொக்கியைப் பார்க்கக்கூட அனந்தசாமிக்குப் பயமாக இருந்தது. இத்தனை நாட்களாக அவர் பார்க்காத ஒரு சீறலும் கோபப் புன்னகையும் அவள் முகத்தில் கனிந்து சுட்டன.

ரங்கன் அவளைச் சாதாரணமாகக் கேட்டிருந்தால் பேசாமல் இருந்திருப்பாளோ, என்னவோ? அப்பா, அம்மா, வீடு எதையும் விட்டு விட்டு அதுவும் அவளைக் கைதூக்கி விடுவதற்காக என்று முன் வந்தது அவள் இருதயத்தைத் தீய்த்து விட்ட மாதிரி தோன்றியது.

சற்று நேரம் தரையைப் பார்த்துச் சூழல் மறந்து நின்றாள்.

''நல்ல வேளை! நான் வந்தேன், இங்கு. இல்லா விட்டால் எப்படித் தெரிந்திருக்கும் எனக்கு?'' சட்டென்று ஞாபகம் வந்து மீண்டும் கேட்டாள்: ''ஏன், மாமா! நீங்கள் சந்திராவுக்குத்தான் நேற்றுக் கடுதாசி போட்டீர்களே. நான்தான் தபாலில் சேர்த்தேன். அதில் என்னைப் பற்றியெல்லாம் எழுதி விட்டீர்களா என்ன?''

''இல்லையே. ஜுரம். அதனால்தான் வர முடியவில்லை என்று எழுதினேன். அவன் சாதாரணமாகப் பார்க்க வந்திருக்கிறான்.''

''ரங்கனுக்கு எழுதினீர்களா?'' என்று சற்று யோசித்து விட்டுக் கேட்டாள் டொக்கி.

''இல்லையே. அவர் இன்று வருவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை.''

''நான்கூடத்தான். அவர் வந்ததும் நல்லதாகப் போயிற்று. தீ மிதிக்கிறவன் அப்பா அப்பா என்று வாய் விட்டு அலறாமல் நெஞ்சைப் பொரித்துக் கொண்டு ஓடுவதைப் போல இவர் ஓடினதை நினைத்தால் சிரிப்பு வருகிறது எனக்கு'' என்றாள் டொக்கி.

அனந்தசாமி அவள் சிரிப்பைப் பார்த்தார். அந்தச் சிரிப்பு தீ மிதித் தீ போல் கணகண வென்று கனிந்து கொண்டுதான் இருந்தது. **(தொடரும்)**

# குடும்பத்தினர் அனைவரும் பரிபூர்ண ஆரோக்கியத்துடனிருக்க



# வாக்குலாக்ஸ்

ட்ரேட் மார்க்

## இனிக்கும் மலமிளக்கி - பேதி மருந்து




நீங்கள் மலச்சிக்கலினால் அவதிப்படுகிறீர்களா? கல்லீரல் உபாதைகள், பித்தம் முதலானவைகளிலிருந்து வருந்துகிறீர்களா? நீங்கள் உற்சாகமற்று இருக்கிறீர்களா? உங்கள் ஜீரண உறுப்புகளுக்கு கெடுதியொன்றும் விளைவிக்காமல்—பரிபூர்ணமாக, விரைவில் அபாயமின்றி நிவாரணமளிக்கும் வாக்குலாக்ஸை சாப்பிடுங்கள். இனிய ருசியுள்ள வாக்குலாக்ஸ் இதமாகவும், நன்றாகவும் வேலை செய்யக்கூடியது. குடும்பத்திலுள்ள அனைவரும் வாக்குலாக்ஸை சாப்பிடலாம். பரிபூர்ண ஆரோக்கியத்தை புதிய முறையில் திரும்பப் பெறுங்கள். வாக்குலாக்ஸ் உங்களுக்கு உற்சாகமும், புத்துணர்ச்சியும் அளிக்கிறது. ஞாபகமிருக்கட்டும், வியாதிகளில் 70 சதவிகிதத்திற்கு மலச்சிக்கலே மூலகாரணம். வாக்குலாக்ஸ் உங்கள் வயிற்றை நன்கு சுத்தப்படுத்துகிறது, இரத்தத்தை பரிசுத்தமாக்குகிறது. கொப்புளங்கள், சிரங்குகள் மற்றும் முகப்பருக்கள் வராமல் தடுக்கிறது.

வாக்குலாக்ஸ் புதிய முறையில் ஆரோக்கியத்துடனிருக்க உதவுகிறது.

( இப்பொழுதுதான் முதன் முதலாக கிடைக்கிறது )

N ஒரு நிக்கொலஸ் தயாரிப்பு

VG. I TAM.

# உங்கள் சிந்தனைக்கு...

**உணவுப் பொருளை மிகக் குறைந்த நேரத்தில் சமைக்கும் கருவியின் பெயரென்ன?**

'பிரெஷர் குக்கர்' என்பதாகும். இதில் திறந்த பாத்திரங்களில் சமையல் செய்யப்படாமல் காற்றுப் புகாது மூடிய பாத்திரங்களில் செய்யப்படுகிறது. உள்ளே நீராவி அதிக அழுக்கத்திலிருப்பதால் பொருள்கள் வெகு சீக்கிரத்தில் வெந்து போகின்றன.

**காப்பிக்கறையை எப்படிப் போக்கலாம்?**

காப்பி சிந்திய இடத்தை உடனே தண்ணீரில் போட்டு நன்றாகக் கசக்கினால் கறை போய் விடும். இல்லாவிட்டால் உப்புப் போட்ட தண்ணீரில் அரை மணி நேரம் ஊற வைத்துப் பிறகு சவுக்காரம் போட்டால் கறை மறைந்து விடும்.

**வீட்டில் மர அகப்பையையோ, மரப்பிடி வைத்த அகப்பையையோ உபயோகிப்பது ஏன் நல்லது?**

மர அகப்பை அல்லது மரப் பிடி வைத்த அகப்பை சூடேறுவதில்லை. அகப்பை சூடேறி யிருந்தால் அதைக் கையால் தொட முடியாது. ஆனால் மரப் பாகம் சூடேறுவதில்லை. மின்சார அடுப்பை உபயோகித்துச் சமையல் செய்யும்போது மரப் பிடி அகப்பை மிகவும் நல்லது. ஏனெனில் மின்சாரம் தவறிப் பாத்திரத்திலும் அகப்பையிலும் பாய்ந்தாலும் (உலர்ந்த) மரத்தைப் பாதிப்பதில்லை.

**துருக்கறையை எப்படி நீக்கலாம்?**

டிரங்குப் பெட்டிகளுக்குள் வைக்கப்படும் சட்டை வேட்டிகளுக்குச் சில சமயம் இக்கதி நேர்கிறது. ஆக்சாலிக அமிலம் என்ற பொருளை நீரில் கரைத்துக் கொண்டு கறைபட்ட இடத்தை அதில் ஊற வைத்தால் போதும். இல்லாவிடில் கறைபட்ட இடத்தை எலுமிச்சம் பழச் சாற்றில் ஊற வைத்து, சவுக்காரம் போடுவதன் மூலமும் நீக்கலாம்.

**புடவையில் எண்ணெய் கொட்டி விட்டது. எப்படிப் போக்கலாம்? — அதாவது எண்ணெயை?**

மை ஒத்தும் தாளை அடியில் வைத்துக் கொண்டு சிறிதளவு பஞ்சை கார்பன் டெட்ரா குளோரைடு என்ற திரவத்தில் நனைத்து எண்ணெயுள்ள பாகத்தில் வைத்துத் தேயுங்கள். கார்பன் டெட்ரா குளோரைடு எண்ணெயைக் கரைத்துத் தன்னுடன் ஐக்கியமாக்கிக் கொள்கிறது. எண்ணெய்க் கறை போய் விடும். புடவையைப் போக்க வேண்டுமானால் நல்ல முறை எவர்சில்வர்க்காரனிடம் போடுவதுதான்!

**நியூட்ரானை புரோட்டானாக்குவதனால் அணுசக்தி கிடைக்கிறது. சரியா? தவறு?**

தவறு. பொருளைச் சக்தியாக்குவதினால் அணுசக்தி கிடைக்கிறது. பொருளைச் சக்தியாக மாற்றலாம் என்று 1905-ல் ஐன்ஸ்டீன் கூறினார். அந்தச் சிறிய செய்திதான் அணுசக்தி உண்டு பண்ணுவதில் அஸ்திவாரமாக அமைந்தது. அவர் கணக்குப்படி மிகச் சிறிய பொருள் அழிந்தால் மிகப் பெரிய பிரும்மாண்டமான சக்தியைத் தரும். அணுசக்தி முதலில் அணுகுண்டு செய்யவும், பின் ஆக்க வேலைக்கும் பயன்பட்டு வருகிறது.

**ரேயான் மரத்திலிருந்து செய்யப்படுகிறது? சரியா?**

சரி. ரேயானுக்கு மூலப்பொருள் மரம், பஞ்சு இவையாகும். இவற்றிலுள்ள செல்லுலோசை செல்லுலோஸ் அசிடேட் என்னும் குழம்பாக்கி நுண்ணிய துவாரங்கள் கொண்ட சல்லடை வழியே செலுத்தும் போது மயிரிழை போன்ற செயற்கைப் பட்டு நூல் கிடைக்கிறது. இதைத்தான் ரேயான் என்கிறோம். நைலான் மற்றொரு வகையாகும்.

**கன்னங்கரேலென்றிருக்கும் தாரிலிருந்து பிளாஸ்டிக் செய்கிறார்கள். சரிதானா?**

சரி. தார் என்பது ஒரு கறுப்புத்திரவம். இது நிலக்கரியைக் காய்ச்சி வடிப்பதினால் கிடைக்கிறது. தாரை மீண்டும் காய்ச்சி வடித்தால் வெவ்வேறு உஷ்ண நிலையில் பல் வேறு பொருள்கள் உண்டாகின்றன. அதில் ஒன்று 'பினால்' என்பதாகும். இது பிளாஸ்டிக் செய்யத் தேவைப்படும் மூலப் பொருள். முதன் முதல் செய்யப்பட்ட 'பேக்லைட்' எனப்படும் பிளாஸ்டிக் பினாலையும் பார்மால் டிகைடு என்பதையும் சேர்த்துச் செய்ததே.

**மக்னீஷியக் கம்பியை எரித்தால் அதன் சாம்பலின் எடை குறைவாக இருக்கும். சரியா? தவறு?**

தவறு. உண்டாகும் சாம்பல் பஞ்சு போல் இருப்பதனால் எடை குறைந்திருக்கும் என்று தோன்றலாம். ஆனால் உண்மை அதுவல்ல. மக்னீஷியக்கம்பி எரியும்போது காற்றிலுள்ள பிராண வாயுவை எடுத்துக் கொண்டு எரிவதால் மக்னீஷியம் ஆக்சைடு என்ற சாம்பல் கிடைக்கிறது. இதன் எடை மக்னீஷியத்தைவிட அதிகமாகும்.

**கடல்நீரை வடிகட்டினால் சுத்தத் தண்ணீர் கிடைக்கிறது.**

தவறு. வடிகட்டினால் மிதக்கும் அசுத்தங்கள்தான் நீங்கும். கரைந்துள்ள பொருள் நீங்கா. கடல் நீரைக் காய்ச்சி வடித்தால்—ஆவியாக்கி, ஆவியை மீண்டும் குளிர வைத்தால் நல்ல தண்ணீர் கிடைக்கும். சூரிய சக்தியை உபயோகித்தும், ரசாயனப் பிசின்களை உபயோகித்தும் கடல் நீரைக் குடி நீராக்கும் முயற்சி நடந்து கொண்டிருக்கிறது.

தொகுத்தவர்: உதயமூர்த்தி

# எக்ஸ்பிரஸ் விசுவம்...!

கதிர்

ஒரு நாள் பாற்கடலில் பள்ளி கொண்ட எம்பெருமானுக்கு நித்திரை வரவில்லை. தமது தாமரைக் கண்களைச் சிறிதே திறந்தவாறு விழித்துக் கொண்டிருந்தார்.

திருமாலின் பாதங்களின் அருகே அமர்ந்திருந்த தேவிக்கு இது வியப்பாக இருந்தது. ''ஒரு நாளுமில்லாத திருநாளாக ஸ்வாமி ஏன் இப்படிக் கொட்டுக் கொட்டென்று விழித்துக் கொண்டிருக்க வேண்டும்?'' என்று தேவி வினவியதும் திருமால் பதில் ஏதும் கூறாமல் இளநகை பூத்தார்.

''நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுங்கள். சிரித்து மழுப்பலாமென்று நினைக்கிறீர்களா? ஏன் தூங்கவில்லை? நானும் பார்க்கிறேன், பார்க்கிறேன், விழித்துக் கொண்டேயிருக்கிறீர்களே? காரணம் என்ன? சொன்னாலொழிய விட மாட்டேன்!'' என்று கூறிவிட்டுத் தனது திருக் கரத்திலிருந்த தாமரைப் பூவால் திருமாலின் முகத்திலே துழாவினாள்.

''தூக்கம் வராததற்குக் காரணம்... தேவி! சொன்னால் நீ நம்ப மாட்டாய்!''

''சொல்லுங்கள். நம்பிக்கை வைத்துக் கேட்கிறேன்!''

''அப்படியானால் சந்தோஷம். காரணம் இதுதான்: படுக்கை முதலிய வசதி சரியாயில்லை. எப்படித் தூக்கம் வரும்?'' என்று கேட்டார் எம்பெருமான்.

''படுக்கை வசதியில்லையா? சுவாமி! அழகுதான் நீங்கள் சொல்வது! இதை விட எந்தப் படுக்கை வசதியாய் அமையும்? பொங்கும் திருப்பாற்கடல். ஊஞ்சல் ஆடுவதே போல் அதன் அலைகள் இப்படியும் அப்படியும் அசைந்தாடுகின்றன. இந்த அற்புதமான பாற்கடலின் மீது மெத்தென்று ஆதிசேடனுலான மெத்தை. பாற்கடல் மீது தவழ்ந்து வரும் தென்றலோ உறங்காதவர்களையும் உறங்கச் செய்யும் விதத்திலே வீசிக் கொண்டிருக்கிறது. உறக்கத்தைக் கலைக்கும்படியான ஒரு சிறு சத்தமோ, இரைச்சலோ ஒன்றும் கிடையாது. ஒரு சிறு மலர் வண்டு கூடத் தங்கள் பக்கம் வந்து ரீங்காரம் செய்து தொந்தரவுகொடுக்கக் கூடாதபடி நானும் இமை கொட்டாமல் பாதுகாத்து வருகிறேன். அப்படியிருக்க வசதியில்லை, தூக்கம் வரவில்லை என்கிறீர்களே, இது நியாயமா? இதை விட வசதியான மஞ்சம் வேறு எங்கே இருக்கிறது? எங்கே தங்களது வினை தீர்க்கும் விரல்களில் ஒன்றை மடித்துச் சொல்லுங்கள், பார்ப்போம். தாங்கள் படைத்த உலகங்கள் பதினான்கிலும் இதை விட வசதியான ஒரு படுக்கை வசதி, மஞ்சம் உண்டானால் சொல்லுங்கள், கேட்கிறேன்!'' என்று சற்றுப் படபடப்பாகவே கேட்டு விட்டாள் தேவி.

''இருக்கிறது......!'' என்றார் அவ்வளவு கேள்விகளுக்கும் அமைதியாக ஒரே வார்த்தையில்.

''எங்கே? எந்த லோகத்திலே?''—தேவியார் விட்டுக் கொடுக்கவில்லை.

''எங்கே என்று கேட்டால் நான் என்னத்தைச் சொல்வது? திருப்பாற்கடல் அரவணைப் படுக்கை வசதியெல்லாம் அதன் கால் தூசிக்குப்போதாது. பார்த்தால் ஆச்சரியப்படுவாய், தேவி!'' என்றார் மாயப்



பிரான். அப்பேர்ப்பட்ட அதிசயமான படுக்கை வசதியைப் பார்க்க வேண்டும் என்று தேவியாருக்கு ஆவல் மேலிட்டது.

''என்னோடு புறப்பட்டு வரத் தயாரா யிருந்தால் அழைத்துச் சென்று காட்டத் தயார்!''

''இதோ புறப்படத் தயார். கிளம் புங்கள்!'' என்று துரிதப் படுத்தினுள் தேவியும்.

''புறப்படத் தயார் என்றுல் மட்டும் போதாது. நாம் போகவேண்டிய இடத் துக்குத் தக்கபடி வேஷமும் போட்டுக் கொள்ள வேண்டும்!'' என்று குறுக் கிட்டார் பவழவாய்ப் பெருமான்.

''என்ன வேஷம் போட்டுக் கொள் வது?'' என்று திரு மகள் வினவவும், திருமால் பூலோகத் தைச் சுட்டிக் காண்பித்து, ''அதோ பார்! பூலோகத்திலே அரங்கன் காவேரி, கொள்ளிட நதிகளை மாலையாகப் போட் டுக் கொண்டிருக்கும் ஸ்ரீரங்கம் க்ஷேத் திரத்துக்கு அருகே..'' என்று பகர்ந்தார்.

''ஆமாம். இந்த இருட்டு நேரத்தில் அங்கு....?''

''ஸ்ரீரங்கம் தாண்டி இப்போது தூத் துக்குடி எக்ஸ்பிரஸ் ரயில் வண்டி சென்று கொண்டிருக்கிறது சென்னை யம்பதியை நோக்கி. நாம் இப்போது எளிய பிரயாணிகள் வேஷத்தில் உடனே



புறப்பட்டு அந்த வண்டியைப் பிடிக்க வேண்டும்!'' என்றார் திருமால்.

இவ்வளவு நேரம் வாய் திறவாமல் இருந்த ஆதிசேடன் ஏதோ குழந்தைகள் கூறுவதே போல், ''ஸ்வாமி! நானும் வரட்டுமா? அதோ கீழே மர வட்டை போல் வளைந்து செல்கிறதே. அதுதானே தூத்துக்குடி எக்ஸ்பிரஸ்? என்னையும் அழைத்துக் கொண்டு போகக் கூடாதா, ஸ்வாமி? நான் மட்டும் இங்கே தனியாக இருக்க வேண்டுமா? அம்மா நீங்களாவது 'சரி' என்று சொல்லுங்களம்மா, தேவி!'' என்று அடம் பிடிக்க ஆரம்பித்து விட்டான். தேவியின் தாயுள்ளம் நெகிழ்ந்தது.

''சரி. அவனுக்கும் ஒரு வேஷத்தைப் போட்டு அழைத்துக் கொண்டு தான் போவோமே!'' என்று சிபாரிசு செய்யவே, திருமாலுக்குத் தேவியின் சொல்லைத் தட்ட முடியவில்லை.

''அப்படியே செய்கிறது. அவன் ஆசையையும்தான் தடுப்பானேன்!'' என்று கூறியவாறு ஆதிசேடனை ஓர் ஈச்சம் பாயாக மாற்றிக் கையில் இடுக்கிக் கொண்டார். தேவி ரயில் பிரயாணத்துக்கான துணி மூட்டை ஒன்றைக் கட்டி இடுப்பில் எடுத்துக் கொண்டாள்.

ஃ ஃ ஃ

**டா**ல்குடி ஸ்டேஷனில் தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் நின்றதும் அந்த நள்ளிருளில் பிளாட்பாரத்தில் காத்திருந்த பெருங் கூட்டம் மூன்றாம் வகுப்புப் பெட்டிகளை நோக்கி வேகமாகப் படையெடுத்தது.

'ரிசர்வ்' செய்யாத மூன்றாம் வகுப்புப் பெட்டி அது. கையில் பாயைச் சுருட்டி வைத்துக் கொண்ட அறுபது வயதுப் பெரியவர் ஒருவர்; அவர் பின்னால் முன் பின் ரயில் பிரயாணம் செய்தறியாத பார்வையுடன் ஒரு ஸ்திரீ.

சற்றே திறந்திருந்த கதவை உள் நோக்கித் தள்ளினார் பெரியவர். கதவு திறக்க முடியவில்லை. பின்னாலிருந்து எதிர் நோக்கி யாரோ தள்ளிக் கொண்டே, ''கதவு திறக்க முடியாது. ஆளு படுத்திருக்கு'' என்று உரக்க எச்சரித்தார். எட்டிப் பார்த்த பெரியவர் ஓர் ஆள் மட்டுமல்ல. பலர் உட்கார்ந்தபடியே உறங்குவது உண்மைதான் என்பதை உணர்ந்தார். எப்படியோ கெஞ்சியடித்துக் கொண்டு இருவரும் உள்ளே நுழைந்தனர். வண்டி இப்போது வேகமாகச் செல்லத் தொடங்கியது. அதன் ஆட்டமும் வர வர அதிகரித்து இடமின்றித் தூங்கியவாறு நின்று கொண்டிருந்தவர்களை உலுக்கியது. இடை இடையே கரிப் புகை குப்பென்று ஜன்னல் வழியாக உள்ளே புகுந்து பெட்டியின் இயற்கையான பெயின்ட் வாடையைத் தோற்கடித்துக் கொண்டிருந்தது.

''ஆண்டாளு!'' என்று அழைத்தார் பெரியவர், தமது நரைத்த மீசையை ஒதுக்கிக் கொண்டு. நாமம் தீட்டிய அவரது நெற்றியை ஒரு முறை பார்த்து விட்டு, ''ஏன்?'' என்று கேட்டுச் சிரித்தாள் ஆண்டாளம்மாள்.

''வண்டியின் ஆட்டம் எப்படி?''

''ஊஞ்சல்தான்!''

''கரிப் புகைக் காற்று...!''

''அடடா, தென்றல்தான்!''

அதற்கு மேல் அவர்கள் பேசவில்லை. மௌனமாகச் சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டே நின்றார்கள். வண்டியின் ஓட்டத்தில் தூங்கிய பிரயாணிகள் சிலர் குறட்டை விடும் சத்தம் கூடக் கேட்டது. ஒவ்வொரு பெஞ்சியிலேயும் நான்கு பேர் கூடக் காலை மடக்கிப் படுத்துக் கொண்டிருந்தார்கள். ஜன்னல் ஓரமாகவும், நடக்கும் பாதையிலும், ஏன், பெஞ்சுகளுக்கு அடியிலும் கூடச் சிலர் மெய் மறந்து தூங்காமலில்லை. டிரங்குப் பெட்டியில் முதுகைச் சாய்த்துக் கால்கள் இரண்டையும் ஜன்னலுக்கு வெளியே ஊசலாட விட்டு இரண்டொருவர் தலைகீழாக யோக நித்திரை செய்யாமலுமில்லை.

டால்மியாபுரம் தாண்டியதும் கதவருகே நின்று கொண்டிருந்த இருவர் அப்படி அப்படியே கீழே உட்கார்ந்து முழங்காலில் தலையை முட்டுக் கொடுத்து உறங்கத் தொடங்கினார்கள்.

எதிர்ப் பெஞ்சு ஓரமாகக் கால்களை மடக்கிக் கொண்டு படுத்திருந்த ஒரு சாயபு கால்களை அந்தரத்தில் நீட்டுவதும், பிறகு அந்தக் கால்களை எதன் மீதாவது போட்டு விட முயன்று, எதிரிலிருந்த ஒருவருடைய சிரசில் வைக்கத் தலைப்படுவதுமா யிருந்தார். அவருடைய முயற்சி ஒவ்வொரு முறையும் வீணாகி வந்தது. சாயபுவின் பாதங்கள் நெருங்கும் போதெல்லாம் அந்த வழுக்கைத் தலை அவற்றை ஏமாற்றி விட்டுப் பக்கவாட்டில் ஆடி ஆடிச் சாய்ந்து கொண்டிருந்தது. இந்தப் பந்தயம் — ஒருவருடைய வழுக்கைத் தலையை இன்னொருவரின் பாதங்கள் பற்றிக் கொள்வது-நீடிக்கவில்லை. சாயபுவின் தலைப்பக்கம் படுத்திருந்த ஒரு முரட்டுப் பிரயாணி மடக்கிக் கொண்டிருந்த தனது கால்களை நீட்டும் முயற்சியில் சாயபுவைத் தரை மட்டத்திலிருந்த ஒரு பெட்டி மீது

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீச்சமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.**

DCG.72QT-TAM

உருட்டித் தள்ளி விட்டார். இதனால் சாயபுவின் உறக்கத்துக்குக் கேடு ஒன்றும் விளைந்ததாகத் தெரியவில்லை. கீழே விழுந்த நிலையிலேயே டிரங்குப் பெட்டியின் விளிம்பில் நெற்றியைப் புதைத்துக் கொண்டு தூக்கத்தில் ஒரு படி அதிகமாக மூழ்கியதில் ஆச்சரியமில்லை. ஏனெனில் அவருக்கு அருகேயிருந்த ஒரு பிரயாணி இரண்டடி உயரமும் அரை அடி அகலமுமுள்ள ஒரு பெட்டியைச் செங்குத்தாக நிறுத்தி அதன் மீது முழங்காலைக் கட்டிக் கொண்டு அமர்ந்து



உறங்கிய நிலையில் – அல்லது காட்சியென்றும் கூறலாம்-வண்டியின் அந்த ஆட்டத்திலும் செங்குத்தாக நிறுத்திய அந்தப் பெட்டி சாயாமலிருந்தது எப்படியென்பது ஒரு புதிராகவே தோன்றும். நன்கு பார்க்கப் போனால் இதில் புதிருக்கு இடமில்லை யென்பதும் தெரியும். நிறுத்தி வைத்த பெட்டியைத் தலையால் இன்னொருவர் தரையில் படுத்தபடி முட்டுக் கொடுத்துக் கொண்டிருந்ததுதான் இதற்குக் காரணம்.

ஆண்டாளம்மாளுக்கும் கால்கள் கெஞ்ச ஆரம்பித்தன. எவ்வளவு நேரம் இப்படியே இடுப்பில் மூட்டையை வைத்துக் கொண்டு நின்று கொண்டிருப்பது? மூட்டையைக் கீழே வைக்க இடமில்லை. குழந்தையொன்று நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. அதனருகே ஒரு கூடைதான் இருந்த போதிலும், அதை எங்கே நகர்த்தி வைப்பது?

''உட்கார வேண்டுமா?'' என்று கேட்டார் பெரியவர். வைப்பதற்கு இடமில்லாமல் சுருட்டிய பாயைத் தரையில் ஊன்றிக் கொண்டிருந்தபடியே இவ்வாறு கேட்டார் அவர்.

''உட்கார வேண்டும்தான். பின்னால் சாய்ந்து கொள்ளவும் ஒன்றுமில்லை. முன்னால் கையை ஊன்றிக் கொள்ளவும் ஒன்றுமில்லை. எவ்வளவு நேரம் இப்படி அந்தரத்தில் மூட்டையோடு நிற்பேன்? உட்கார இடம்?'' என்று பரிதாபத்துடன் கேட்டாள் ஆண்டாளம்மாள்.

இந்தச் சமயத்தில் படுத்திருந்த குழந்தை உறக்கத்தில் நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டு இடுப்பை வளைத்துக் கொண்டது. பிறகு இரண்டு முறை புரண்டு கிழவிக்கும் கூடைக்குமிடையே இருந்த சிறிய இடைவெளியில் தலையைத் திணித்துக் கொண்டு தூங்கிற்று.

குழந்தை புரண்டு சென்ற இடத்தில் சிறிதே இடமிருப்பதைச் சுட்டிக் காட்டினார் நாமம் சாத்தி நின்ற பெரியவர்.

அந்த இடத்தில் துணி மூட்டையை வைத்துக் கொண்டு அதன் மேல் ஒரு வித நிம்மதியுடன் ஆண்டாளம்மாள் உட்கார்ந்து கொண்டாள். பிறகு பரிவுடன் பெரியவரை நோக்கி, ''நீங்கள்?'' என்று கேட்டாள்.

''நான் நிற்கிறேன். இந்தப் பாய் தான் ஒரு சங்கடமாகி விட்டது. இதை வைப்பதற்கு இடமில்லாமல் தவிக்கிறேன். யார் மீது இதைச் சாத்துவது? மேலே தட்டில் வைக்கவும் இடமில்லை. கையிலேயே வைத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்'' என்றார் பெரியவர். அப்போது அவருடைய கவனத்தைக் கவர்ந்தார் வேறொரு பிரயாணி.

''அங்கே கவனி, ஆண்டாளு!'' என்றார் பெரியவர்.

கீழே ஒரு கைப்பெட்டியை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த ஒருவரின் தலை கொஞ்சம் கொஞ்சமாகத் தரை மட்டத்துக்கு வருவதும், பிறகு திடுக்கிட்ட நிலைமை தோன்றி மேலே மேலே சென்று பின்புறமாகச் சாய்வதுமாக இருந்தது. ஒரு கட்டத்தை

அடைந்ததும் பின்புறம் சாய்ந்த தலை மறுபடியும் முன்புறம் திரும்பி மெள்ள மெள்ளக் கவிழ்ந்து ஒரு தகர டின்மீது டக்கென்று மோதிக் கொள்ளும். இவ்வாறு இரண்டு மூன்று தடவைகள் முட்டிக் கொண்ட பிறகு பிரயாணி அவரை அறியாமலே தனது பையிலிருந்த கைக்குட்டையைச் சுருட்டி எடுத்து நெற்றியில் வைத்துக் கொண்டு தகர டின் மீது அதே நிலையில் தூங்குவதைப் பார்த்தார் பெரியவர். ஆனால் ஆண்டாளம்மாள் இதைக் கவனிக்கவில்லை. அவளுக்கும் கண்கள் தம்மையறியாமலே சுழலத் தொடங்கின. தலை கொஞ்சம் கொஞ்சமாக ஆடி விழத் தொடங்கியது. அவள் எதிரில் கிழவி வைத்திருந்த கூடையும் அதன் மீது சிறிய மூட்டை ஒன்றும் இருந்தன. தம்மை யறியாமலே ஆண்டாளம்மாளின் நெற்றி அந்தக் கூடை மீது மோதிப் பிறகு அதே நிலையில் மூட்டை மீது நிலையாகப் பதிந்து கொண்டது. அதன் பிறகு வண்டியில் ஒருவிதமான பேச்சு மூச்சும் கிடையாது.

ஃ ஃ ஃ

**வ**ண்டி திண்டிவனம் தாண்டும் போது விடியற்காலம் நாலு மணி இருக்க வேண்டும். உறங்கி வழிந்த ஆண்டாளம்மாளைப் பெரியவர் மெல்லத் தட்டி யெழுப்பினார். கூடையிலிருந்து தலையை உயர்த்திய ஆண்டாளம்மாள் திடுக்கிட்டு, ''என்னை யறியாமலேயே நன்றாய்த் தூங்கி விட்டேன். மணி என்ன?'' என்று திடுக்கிட்டுக்கேட்டாள்.

''மணி என்னவாக இருந்தால் என்ன? பக்தர்கள் எனக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடும் நேரம். ஊம்... புறப்படு, புறப்படு....!'' என்று கூறிக் கையில் சுருட்டிய பாயைத் தரையில் இடித்தார்.

''நல்ல தூக்கம், நல்ல தூக்கம், இந்த ரயில் வண்டியிலே!'' என்று கூறி ஆண்டாளம்மாள் எழுந்தாள்.

''ஆமாம். பாய் படுக்கை ஒன்றுமில்லாமல் வெறும் கூடையில் வைக்கோலும், அதன் மீது ஒரு மூட்டையும் அதன் மீது தலையை வைத்துக் கொண்டு தூங்கும் வசதி பின்னே இராதா, என்ன?'' என்று கேட்டுக் கொண்டே பெரியவர் சுற்றும் முற்றும் ஒரு தடவை திரும்பிப் பார்த்தார்.

யாரும் விழித்துக் கொண்ட அடையாளமே காணோம். ஆண்டாளம்மாளுடன் ஜன்னல் வழியாக வெளியே உதய கால இருளில் மறைந்து விட்டார் பெரியவர்.

**வ**ண்டி செங்கற்பட்டுச் சந்திப்பை அடைந்ததும் தகர டின்னில் நெற்றியை வைத்துக் கொண்டு தூங்கிய பிரயாணியை அருகிலிருந்தவர் விலாவில் இடித்து ''எழுந்திருடா விசுவம்! செங்கற்பட்டு வந்து விட்டது. பெட்டிச் சாவியைக் கொடு. சில்லறை எடுக்கணும்'' என்று கூறி உலுக்கினான்.

விசுவம் எழுந்திருக்கவில்லை. அவனுடைய உடல், குழியில் படுத்துக் கொண்ட சுவான நிலையில் வளையம் போட்டிருந்தது. அவனுடைய கரம் ஒன்று தன்னை யறியாமலே, குத்துப் பட்ட விலா எலும்புகளைத் தடவிப் பார்த்தது. பிறகு மறுபடியும் ஆழ்ந்த உறக்க நிலைமை. தகர டின்னை இன்னும் இறுகக் கட்டிக் கொண்டு ஏதேதோ அவன் வாய் பிதற்றிற்று. ''காப்பியைப் பெட்டியில் வைத்துப் பூட்டு....'' என்று கூறினான்.

''அடே! காப்பிடா காப்பி! எழுந்திரு!'' என்று கூறி மேலும் இரண்டொரு முறை விலா எலும்பில் இடித்தான் நண்பன். விசுவம்வலி தாளாமல் தலையை நிமிர்த்திச் சிரித்தான்.

''தூங்கிட்டேனே, ரொம்ப நாழியா நீ எழுப்பறயோ?'' என்று கேட்டான்.

''மதுராந்தகத்திலிருந்து உன்னை எழுப்பிப் பார்க்கிறேன். எழுந்திருக்கவில்லை. உன்னை விலாவில் குத்தி, என் கைதான் வலிக்கிறது'' என்றான் அவன் நண்பன்.

''ஏதோ தூங்கிவிட்டேன்.''

''நன்றாகத் தூங்கினாயப்பா விசு, இந்தத் தகர டின் மேலே நெற்றியை வைத்துக் கொண்டு. பெருமாள் அனந்த சயனம் பண்றாப்பலே அப்படித் தூங்கினயேடா தகர டின் மேலே...!'' என்றான் நண்பன். விசுவம் மீண்டும் சிரித்துக் கொண்டு, ''இந்தத் தகர டின் மேலே தூங்கின சுகம் பாற்கடல் பெருமானுக்குக் கூட இருக்காது!'' என்றான்.

ஃ ஃ ஃ

''**கே**ட்டாயா? அவன் சொல்வதை? தேவி!'' என்றார் எம்பெருமான் தம் அரவணையில் மீண்டும் படுத்துக் கொண்டபடியே.

''காதில் விழுந்தது. கேட்டேன். தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் வண்டியில் ஒரு தகர டின் மீது தூங்கும் வசதி காணாது, இந்தப் பஞ்சணையும் பாற்கடலும்...... ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். வேடிக்கை!'' என்று சொல்லி நகைத்தாள் தேவி.

பொங்கல் வெளியீடு

பி.வி.என். புரொடக்ஷன்ஸ்

# மாடப்புறா

கதை,வசனம்: இலகம் நாராயணசாமி • இசை: K.V.மகாதேவன் • பாடல்கள்: மருதகாசி

காமிரா: ரத்னம் • ஆர்ட்: அங்கமுத்து • ஸ்டில்ஸ்: P.K.நடராஜ் • ஸ்டுடியோ: மெஜஸ்டிக்

டைரக்ஷன்: S.A.சுப்பராமன்

தயாரிப்பு: B.வள்ளிநாயகம்













# பி.ஓ.ஏ.ஸி.யால் நியமிக்கப்பட்ட ட்ராவல் ஏஜெண்டே மேலானவர் அவர் உதவிமூலம் நீங்கள் பெறுவது...




விஸா முதலிய பிரயாண தஸ்தாவேஜுகள்.



ஹோட்டலில் தங்கும் வசதி



சுற்றிப்பார்க்க விசேஷ ஏற்பாடுகள்.



கவலைகளிலிருந்து விடுதலை.

தவணை முறைப்படி டிக்கட் வழங்கும் பி. ஓ. ஏ. ஸி. திட்டத்தைப் பயன் படுத்திக்கொள்ளுங்கள்.

**பயணம் முந்தி—பணம் பிந்தி!**

பி.ஓ.ஏ.ஸியினால் நியமிக்கப்பட்ட உள்ளூர் ட்ராவல் ஏஜெண்டும், தவிர எங்கெங்குமுள்ள பி.ஓ.ஏ.ஸி அலுவலகங்களும் உங்களுக்குப் பணிபுரியக் காத்திருக்கின்றன.

உலகம் முழுவதும் பி. ஓ. ஏ. ஸி. உங்களை

**B·O·A·C**

நன்கு பேணுகிறது

ஏயர் இந்தியா மற்றும் க்வான்டாஸ் அவர்களோடு கூட்டமைந்த
பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏயர்வேஸ் கார்ப்பொரேஷன்

# புது வெள்ளம்

### அத்தியாயம் முப்பத்தைந்து

## பிரிவுக்குப் பின்

சென்னை சென்ட்ரல் நிலையத்தில் வழக்கம்போல் கூட்டம் மிகுந்திருந்தது. இரவு ஒன்பது மணிக்கு வடக்கே புறப்பட வேண்டிய ரயில் பத்து மணிக்குத்தான் புறப்படப் போகிறதென்று அறிவித்தார்கள். சுந்தரம் தன் மனைவி குழந்தைகளோடும் மூட்டை முடிச்சுக்களோடும் ஒரு மூன்றாம் வகுப்புப் பெட்டிக்குள் இடம் தேடிக்கொண்டான்.

சுந்தரத்தைப் பொறுத்த வரையில், அவனுடைய சென்னை நகர வாழ்க்கைக்கு ஒரு முடிவு ஏற்பட்டு விட்டது. ஆந்திர நாட்டுக்கு மத்தியில், தெலுங்கு மக்கள் வாழும் பகுதிக்கு அவன் ரயிலேறி விட்டான். வேலை கிடைத்த இடத்திலேயே அவனுடைய வீட்டு வசதிக்கும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

மீனாட்சியையும் குழந்தைகளையும் விட்டுப் பிரிய மனமில்லாமல் சாந்தா அவர்களோடு ஒன்றாக ரயிலுக்குள் உட்கார்ந்திருந்தாள். குழந்தைகளுக்கு வேற்றூருக்குப் புறப்படுகிற உற்சாகம். மீனாட்சியின் கண்களும் சாந்தாவின் கண்களும் கலங்கிச் சிவந்திருந்தன. ஒருவரை விட்டு ஒருவர் பிரியப் போகும் வேதனையை அவர்கள் இருவராலுமே தாங்க முடியவில்லை.

சுந்தரமும் முருகையனும் ரயில்வே கூடத்திலிருந்த சிமெண்ட் பெஞ்சியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். ரயில் ஒரு மணி தாமதமாகப் புறப்படவிருந்த செய்தி ஒரு வகையில் சுந்தரத்துக்கு மிகவும் பிடித்திருந்தது. இன்னும் சற்று நேரமாவது முருகையனின் அருகில் அவன் இருக்கலாமல்லவா?

''முருகையா! உன்னைப் பற்றிய விவரங்களையெல்லாம் நான் சாந்தாவின் தாயாரிடம் சொல்லியிருக்கிறேன். உன்னால் அவர்களுக்கும் உதவியாக இருக்கும்; அவர்களால் உனக்கும் உதவியாக இருக்கும்.''

முருகையன் ஒன்றுமே பதிலளிக்கவில்லை. நண்பனிடம் ஏதாவது மறுத்துப் பேசினால் அவன் வருத்தப் படக்கூடும்என்றுமௌனமாக இருந்தான்.

''என்ன யோசிக்கிறாய், முருகையா?'' என்று கேட்டான் சுந்தரம்.

''உங்கள் யோசனைப்படியே இருப்பதற்கு முயற்சி செய்கிறேன்.''

''அறை உனக்குத் தனியாக வெளியில் இருக்கிறது. உனக்கு வேண்டிய சாப்பாடும் உன் அறைக்கே வந்துவிடும். நீயோ அவர்களுக்குச் சுமையாக இருக்கப் போவதில்லை. உன் வருமானத்தில் ஒரு பகுதியை அவர்களிடம் கொடுத்துத்தான் உனக்கு வேண்டிய வசதிகளைப் பெற்றுக் கொள்ளப் போகிறாய். இதில் என்ன தவறு இருக்கிறது?''

''எந்த வகையிலும் உரிமையில்லாத ஓர் இடத்தில், நான் அதிகமான உரிமைகளை எடுத்துக் கொள்வதுபோல் எனக்குத் தோன்றுகிறது. எனக்காக மற்றவர்களை எந்த அளவுக்குத்தான் நான் சிரமப் படுத்துவது? அவர்கள் வீட்டில் எல்லோருமே பெண்கள். நான் எப்படியண்ணா அங்கு தங்குவது?''

மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என்பது ஒருபுறமிருந்தாலும், முருகையனின் மனமே அதற்குச் சிறிதும் இடம் கொடுக்கவில்லை. என்றாலும் அதை அவன் நண்பனிடம் கூறத் தயங்கினான்.

முருகையனின் மன நிலையைப் புரிந்து கொண்ட சுந்தரம், ''இதோ பார், நாமெல்லாம் ஒரு வகையில் பார்க்கப் போனால் அனாதைகள்; வாழ்க்கையால் வஞ்சிக்கப்பட்டவர்கள்; நாம் ஒருவருக்கொருவர் உதவிகள் செய்து கொள்வதும், உதவிகள் பெற்றுக் கொள்வதும் தவறே இல்லை'' என்று கூறினான்.

''சரி, அண்ணா! முடிந்த வரையில் அங்கேயே இருக்கப் பார்க்கிறேன்.''

''முடிந்த வரையில் என்று சொல்லாதே! முடியும் என்று சொல். சாந்தாவைப் பற்றி ஒரே வார்த்தையில் சொல்கிறேன். அவள் நல்ல பெண். அந்தக் குடும்பத்துக்கும் வேறு ஆண் துணை கிடையாது. நான் இங்கு இருந்தவரையில் என் குடும்பம் வேறு அவள் குடும்பம் வேறு என்று இருவரும் நினைக்

அகிலன்

கவே யில்லே. என்னுடன் கூடப் பிறக்காத ஒரே குறைதான் அவளுக்கு. கூடப் பிறந்திருந்தால் நான் அதிர்ஷ்டசாலி. உன்னே நான் அவர்களுக்கு உதவி செய்யச் சொல்கிறேன், முருகையா!''

எதையும் எடுத்துக் கொள்வதைவிடக் கொடுத்து விடும் குணமுள்ளவன் முருகையன் என்பது சுந்தரத்துக்குத் தெரியும். அதனுல்தான் அவன் மனத்தை அறிந்து கொண்டு, அதற்கேற்ப அவனிடம் பேசினுன் சுந்தரம். சாந்தாவின் குடும்பத்துக்கு முருகையனுல் உதவி என்று கூறி, அவனே நம்பச் செய்தால், முருகையன் அமைதிபெறக்கூடுமல்லவா?

''உன்னுல் முடிந்தவரையில் அவர்களுக்கு உதவி செய். உனக்கு ஏதாவது வேறு வேலே கிடைத்துவிட்டால், பிறகு உன்னுடைய வளர்ச்சியைப் பாதித்துக் கொண்டு நீ அங்கே இருக்க வேண்டுமென்பதில்லே. கடவுள் உனக்கு நல்ல வழி காட்டுவார்.''

ரயிலுக்கு மணி அடித்து விட்டார்கள். சுந்தரம் ஓடிச் சென்று ரயிலில் ஏறினுன். ரயிலுக்குள்ளிருந்த சாந்தா மீனுட்சியிடம் பிரியா விடைபெற்றுக் கொண்டு வெளியில் இறங்கி வந்தாள். முருகையனும் சாந்தாவும் ரயிலின் ஜன்னலேப் பற்றிக் கொண்டு நின்ருர்கள். சாந்தாவால் வாய் திறந்து பேச முடியவில்லே. துயரம் அவள் தொண்டையை அடைத்துக் கொண்டது. மாலே மாலேயாக வழிந்த கண்ணீரைத் தன் சேலேத் தலேப்பால் துடைத்து விட முயன்ருள்.

மீனுட்சி சாந்தாவிடம் முருகையனேக் கவனித்துக் கொள்ளும்படி கூறினுள். முருகையனிடம் சாந்தாவின் குடும்பத்தைக் கவனித்துக் கொள்ளும்படி கூறினுன் சுந்தரம். மீனுட்சியின் மடியிலிருந்த சிறு குழந்தையின் தளிர்க் கரத்தைப் பற்றி முத்தமிட்டுத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள் சாந்தா. ரயில் ஊதிக் கொண்டு நகர்ந்தது.

சாந்தாவும் முருகையனும் இரண்டு சிலேகளேப்போல் அதே இடத்தில் நின்ருர்கள். நகர்ந்த ரயில் எத்தனேயோ பிரயாணிகளே அவர்கள் கண் முன்னே காட்டி மறைத்துச் சுமந்து சென்றது. மற்றப் பிரயாணிகளேப் போன்றவர்கள் தாமா சுந்தரத்தின் குடும்பத்தாரும்? வாழ்க்கை என்ற புகை வண்டி அவர்களேயும் கண்ணில் காட்டி மறைத்து விட்டு எங்கோ இழுத்துச் செல்கிறதா?- ரயிலுக்குப் பின்புறம் தெரிந்த சிவப்பு விளக்கு அவர்கள் விழிகளிலிருந்து மறையும் வரையிலும் அதைப் பார்த்துக் கொண்டு நின்ருர்கள் சாந்தாவும் முருகையனும்.

பிறகு, சட்டென்று முருகையன் சாந்தாவின் பக்கம் திரும்பினுன். கண்ணீர் நிறைந்த அவள் முகத் தோற்றம் முருகையனின் இதயத்தைக் கசக்கிப் பிழிந்தது. அவனும் தன்னேயறியாது கண்களேத் துடைத்துக் கொண்டான்.

'இது என்ன பாசம்? இவள் யார், அவர்கள் யார்? இவர்களுக்குள் என்ன உறவு? இரண்டு நாட்களாகவே சுந்தரத்தின் குழந்தைகளே விடாப் பிடியாகத் தன் வீட்டில் வைத்துக் கொண்டிருந்தாளே இவள்?'

சாந்தாவுக்கு மட்டிலுமென்ன? முருகையனே அப்போது அந்தப் பிரிவுத் துன்பத்தைத் தாங்க முடியாமல்தான் தவித்துக் கொண்டிருந்தான். ஏதோ மனிதர்களே இல்லாத பாலேவனத்துக்கு மத்தியில் தன்னந் தனியாக நிற்பது போன்ற ஓர் உணர்ச்சி அவனுக்கு.—'சாந்தாவுக்கும் இப்படித்தானே இருக்கும்? என்னேவிட அந்தக் குடும்பத்தோடு நெருங்கிப் பழகியவளல்லவா இவள்?'

முருகையன் நின்ற இடத்தில் அந்த நேரத்தில் அவள் தாயாரோ தங்கையோ நின்று கொண்டிருந்தால், கட்டாயம் அவர்களைக் கட்டிக் கொண்டு அவள் தேம்பியிருப்பாள்.

''போவோமா?'' என்றான் முருகையன். சாந்தா மௌனமாகத் தலையசைத்து விட்டு அவன் பின்னால் நடந்தாள். இருவருக்கும் ஒன்றும் பேசத் தோன்றவில்லை; இருவருடைய இருதயங்களும் கனத்திருந்தன.

ரயில் நிலையத்துக்கு வெளியில் அவர்கள் வந்தார்கள். அங்கே வாடகைக் கார் ஒன்றைக் கூடக் காண முடியவில்லை. 'டவுன் பஸ்'ஸும் இனிக் கிடைக்காது. ரிக்ஷாக்களோ, வேறு வாகனங்களோ தென்படவில்லை.

சாந்தாவை ஓரிடத்தில் நிற்கச் சொல்லி விட்டு, வாகனத்துக்காக அங்குமிங்கும் ஓடி யலைந்தான் முருகையன். பிறகு வருத்தத்துடன் திரும்பினான்.

''அதனால் என்ன? நடந்துதான் போவோமே!'' என்றாள் சாந்தா.

'மூன்று மைல்களுக்கு மேல் இரவு நேரத்தில் அவளோடு தனிமையில் நடந்து செல்வதா?' என்று முருகையன் தயங்கி நின்றான்.

''வேறு என்ன வழி? வாருங்கள்; நடக்கத்தான் வேண்டும்!''

சுகுணாவுக்கு அன்றைக்கு ஒரு நாடகமிருந்தது. இல்லாவிட்டால் அவளும் அவள் தகப்பனாரும் ரயிலடிக்கு வந்திருப்பார்கள். நான்கு பேர்களாகச் சேர்ந்து சென்றால் ஒன்றும் தோன்றாது. ஆனால் சாந்தாவுடன் அந்த நேரத்தில் தனியாகச் செல்வதென்றால்....

வேறு வழியில்லை. அவர்கள் நடந்தார்கள். சென்னை நகரத்தின் பகல் வேடம் களைந்துவிட்ட நேரத்தில் அவர்கள் களைத்துப் போய்ச் சோர்வோடு நடந்தார்கள். நடைபாதைகள் அந்த வேளையில் நடைபாதைகளாக இல்லை. குடியிருப்பு மாளிகைகளாக மாறியிருந்தன.

வானமே கூரையாக, மண்ணே மலர் மஞ்சமாக, மனிதர்கள் வழிநெடுகிலும் மந்தை மந்தையாகப் படுத்திருந்தனர். மாட மாளிகைகள் நிறைந்த மாநகரம் பகலில் ஒரு தோற்றமும், இரவில் மற்றொரு தோற்றமுமாக விளங்கியது.

முருகையன் நடைபாதை வாசிகளையெல்லாம் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடந்தான்.

''இவர்கள் வாடகை கொடுக்க முடியாத அனாதைகள்; நாம் கொடுக்க முடிந்த அனாதைகள்'' என்றாள் சாந்தா. ''இவர்களுக்கும் நமக்கும் இதுதான் வித்தியாசம்!''

முருகையனுக்கு மெய் சிலிர்த்தது. அவன் எதை நினைத்தானோ அதை அவள் அப்படியே பேசி விட்டாள். எப்படி அவளால் ஒரே சமயத்தில் அவனைப் போலவே நினைக்க முடிந்தது?

### அத்தியாயம் முப்பத்தாறு

## சாந்தியற்ற சாந்தா

சாந்தா அன்றைக்கு முற்பகல்தான் சாப்பிட்டாள். இரவில் ரயிலடிக்கு வருவதற்கு முன்பு அவளுக்குச் சாப்பிடப் பிடிக்கவில்லை. ஏதோ இனம் புரியாத ஒரு தவிப்பு அவளை ஆட்கொண்டிருந்ததால், வெறும் தண்ணீரை மட்டும் குடித்து விட்டு அவள் வந்திருந்தாள்.

ரயில் சென்ற பிறகுதான் அவளுக்குப் பசி யெடுத்தது; தாகம் எடுத்தது; களைப்பு மேலிட்டது. இவ்வளவையும் சொல்லிக் கொள்ளாமல் அவள் முருகையனோடு நடக்கத் தொடங்கினாள். நேரம் செல்லச் செல்ல அவளுடைய நடையின் வேகம் குறைந்தது; கால்கள் தள்ளாடின. எதிரே நீண்டு கிடந்த பாதை வளர்ந்து கொண்டே போவது போல் அவளுக்குத் தோன்றியது.

முருகையன் அவளுடைய சிரமத்தைப் புரிந்து கொண்டான். புரிந்து கொண்டு என்ன செய்வது?

மௌண்ட் ரோட்டுப் பாலத்தைத் தாண்டி வந்து விட்டார்கள் இருவரும். திடீரென்று தலையில் கையை வைத்துக் கொண்டு பாதையோரமாக உட்கார்ந்து விட்டாள் சாந்தா. அவளுக்குத் தலையைச் சுற்றியது; அவளுடைய நிலையைக் கண்டு முருகையனுக்கும் தலையைச் சுற்றியது.

அருகில் இருந்த ஒரு பெட்டிக் கடை திறந்திருந்தது. ஓடிச் சென்று ஒரு சோடாவை வாங்கி அவளுக்குக் கொடுத்துக் குடிக்கச் செய்தான் முருகையன். ஏனோ அப்போது அவனுக்கு விழுப்புரம் சந்திப்பில் சித்திராவுக்குத் தான் சோடா வாங்கிக் கொடுத்த நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது.

சோடாவைக் குடித்த சாந்தா, ''ஒரு ஐந்து நிமிஷம் கழித்துப் புறப்படுவோமா?'' என்றாள். முருகையனும் சற்றுத் தள்ளி அவளருகில் உட்கார்ந்தான்.

எதையோ நினைத்துக் கொண்டவன் போல் சாந்தா அவனிடம் பேசத் தொடங்கினாள். தன் மனத்திலுள்ளதை வெளியிட்டு விட்டால் ஓர் ஆறுதல் கிடைக்கும் என்று நினைப்பதுபோலிருந் தது அவள் பேச்சு.

''என் தாயாருக்கு வைத்தியம் பார்த்துக் கொள்வதற்கும் தங்கையைப் படிக்க வைப்பதற்கும் நாங்கள் சென் னைக்குப் புறப்பட்டு வந்தோம். வருவ தற்கு முன்பு எங்கள் எல்லோருக்குமே ஓரளவு பயம்தான். ஆனால் வந்து சேர்ந்த பிறகு, அண்ணன் வீட்டுக்கு அடுத்த வீடு கிடைத்த பிறகு, எங்கள் எல்லோருக்குமே இந்த ஊர் பிடித்து விட்டது. எங்களுடைய சொந்தக் கிரா மத்தில் எங்களுக்கு உற்றார் உறவினர் கிடையாது. இங்கேயோ அண்ணன், அண்ணி, குழந்தைகள் எல்லோருமே கிடைத்தார்கள். பட்டணத்தில் வேறு சில மனிதர்களிடமும் பழகியிருக்கிறேன். ஆனால் இவ்வளவு பாசத்தையும் அன்பை யும் குடும்பத்துக்கு வெளியே மற்றொரு குடும்பத்தில் நான் கண்டதில்லை. வெறும் அன்பு செலுத்துவதால் மனி தர்கள் குறைந்து போய் விடுவார் களா, என்ன?''



''நானும் வேறொரு குடும்பத்தில் பழகி விட்டுத்தான் இங்கே வந்தேன். அவர்களோ உறவினர்கள். அங்கே அவர்கள் என்னை முதல் நாள் மதித் தார்கள்; மறுநாள் பராமுகமாக இருந் தார்கள்; மூன்றாவது நாள் வெறுத்து ஒதுக்கினார்கள்.''

பரிவோடு முருகையனைத் தலை தூக் கிப் பார்த்தாள் சாந்தா. அவளுடைய பார்வையில் நிலவின் குளுமையென அன்பு கசிந்தது. மெல்லப் புன்னகை பூத்தாள் அவள்.

''உங்களுக்கு இனி அதுபோல் மறு படியும் அநுபவம் ஏற்படாது. எங்கள் வீட்டில் உங்களுக்கு வசதிகள் போதா மல் இருக்கலாம்; நல்ல சாப்பாடுகூடக் கிடைக்காமல் இருக்கலாம்; ஆனால் அன்புக்கும் பாசத்துக்கும் பஞ்சம் இருக் காது. அண்ணா வீட்டில் எப்படி யிருந் தீர்களோ, அப்படியே இங்கும் இருக்க லாம்'' என்றாள் சாந்தா.

முருகையனுக்கு அவளுடைய பேச்சு நம்பிக்கையைத் தருவதற்குப் பதி லாகக் கலக்கத்தையே கொடுத்தது. அதற்குள் அவளாகவே முடிவு செய்து விட்டாளா? இனி அவன் அங்கு தான் இருக்க வேண்டுமா?

''சாந்தா!'' என்று அவளை அழைத்தவன், ஒரு கணம் மேலே பேசத் தோன்றாமல் மௌனம் சாதித்தான்.

''என்ன?''

''சுந்தரம் அண்ணா வருத்தப் படுவாரே என்பதற்காக நான் அவருக்கு முன்னால் எதையும் மறுத்துப் பேசவில்லை. இனியும் நான் அந்த வீட்டில் தங்கி யிருந்தால் உங்களுடைய அன்பின் எல்லையை மீறிய தவறைச் செய் தவனாவேன். என்னுடைய வாழ்க்கை எனக்கே ஒரு சுமை போல் தோன்றுகிறது. இந்தச் சுமையை நான் உங்கள் மீது வைப்பது நியாயம் ஆகுமா?''

திடுக்கிட்டாள் சாந்தா. ''வேறு என்ன செய்யப் போகிறீர்கள்? எங்கே போகப் போகிறீர்கள்?''

''இடமா இல்லை? வசதி படைத்த வர்களின் மனப் பாதைதான் விரிய வில்லை என்றாலும் நடை பாதைதான் நகரம் முழுவதிலும் விரிந்து கிடக் கிறதே! அவற்றிலும் பலர் வாழ்ந்து கொண்டுதானே இருக்கிறார்கள்?''

''நீங்கள் ஆண் பிள்ளைகள்; வீரம் பேசுவீர்கள்; எதையும் செய்வீர்கள்'' என்று சற்றுக் கோபத்தோடு கூறினாள் சாந்தா.

''வீரமில்லை, சாந்தா! வாழ்வு மனி தனைச் சாவின் எல்லையிலே கொண்டு தள்ளும்போது, அவன் பயந்து கொண்டு அதன் பிடியிலிருந்து தப்பத்துடிக்கிறானே

அதற்குப் பெயர் வீரமென்று சொல்வது? எனக்கு இப்போது என் தகப்பனார் மாத்திரம் இருந்திருக்கா விட்டால், நான் புரட்சிக்காரனாக மாறி வெள்ளைக் காரர்களை விரட்டும் முயற்சியில் இந்த உயிரை விட்டிருப்பேன். உயிர் வேறு எதற்காகத்தான் இருக்கிறது? சோற்றுக் கவலை ஒன்றே பெருங் கவலையாக உள்ள நாட்டில் மனிதன் உயிரோடிருந்து என்ன பயன்?''

''இதோ பாருங்கள்!'' என்று பதறினாள் சாந்தா. ''நான் இப்போது தான் நொந்த மனத்தோடு திரும்பியிருக்கிறேன். நீங்கள் வேறு என்னை நோகச் செய்கிறீர்கள்! ஆண் பிள்ளையாகிய உங்களுக்கு என்ன குறை வந்து விட்டது? நாங்கள் மூன்று பெண்கள் கூடி வாழ்கிறோமே எந்த நம்பிக்கையில் வாழ்கிறோம்? இந்த நம்பிக்கைகூட உங்களுக்கு இல்லையா?''

''நம்பிக்கையில் தான் ஊசலாடிக் கொண்டிருக்கிறேன். ஆனால் எனக்காக யாருடைய எதிர்காலத்தையும் ஊசலாடச் செய்ய வேண்டாம் என்று தான் பார்க்கிறேன்.''

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கோபமாய்க் கேட்டாள் சாந்தா.

''நாளைக்குக் காலையில் உங்கள் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொள்ளலாம் என்று பார்க்கிறேன்.''

''இவ்வளவுதானே? இதற்காக நாளைக்குக் காலை வரையில் எதற்காகப் பொறுத்திருக்க வேண்டும்? இப்போதே நீங்கள் என்னை இந்த இடத்தில் விட்டு விட்டுப் போகலாம். வீட்டுக்குப் போவதற்கு வழி தெரியும். நான் யாருக்கும் பயந்தவளும் அல்ல. எனக்குக் கொஞ்சம்கூட வருத்தமில்லை.''

முருகையனுக்குச் சாந்தாவின் பேச்சு பெரிய புதிராக இருந்தது. எந்த உரிமையை வைத்துக்கொண்டு, எந்த உறவை வைத்துக்கொண்டு, எந்தத் தகுதியின் பேரில் தன்னிடம் அவள் பேசுகிறாள்?

''பாசம், பற்றுதல், அன்பு என்றெல்லாம் சொல்கிறார்களே, இதில் ஏதாவது ஒன்று உங்களிடம் இருக்கும் என்று பார்த்தேன். உங்களுக்கு உங்களுடைய தன்மானம்தான் பெரிதாகத் தோன்றுகிறது. தாராளமாக உங்கள் விருப்பப்படி செய்யுங்கள்.''

அந்த இரண்டுங்கெட்டான் வேளையில், நடுத் தெருவின் ஓரத்தில் அமர்ந்து அவளோடு வாதாடத் தொடங்கியதற்காக வருத்தப்பட்டான் முருகையன். மேலே வானத்தில் குவியல் குவியலாக விண்மீன்கள் பூத்துக் கிடந்தன. கடற்காற்று இதமாகக் குளுமையை வாரிக் கொண்டு வந்து கொட்டியது. அருகில் அமர்ந்திருந்தாள் ஓர் அந்நியப் பெண்மணி. அவள் அந்நியப் பெண்தானா?

''என்னை மன்னித்துக் கொள், சாந்தா! ஏற்கெனவே நீ கலங்கியிருப்பது தெரியாமல் நானும் ஏதோ பேசி விட்டேன். வா, வீட்டுக்குப் போன பிறகு மெதுவாகப் பேசிக்கொள்வோம். இப்போது ஒன்றும் அவசரம் இல்லை.''

சாந்தாவின் தலை கவிழ்ந்தது. அவள் விம்மி விம்மி



அழுதாள். முருகையனுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவளுடைய அறிவைப் பற்றியும், திறமையைப் பற்றியும், உழைப்புச் சக்தியைப் பற்றியும் அவன் எவ்வளவோ நம்பிக்கை வைத்திருந்தது உண்மைதான். பெண்களைப்பற்றியே அதிகம் தெரியாதவன் அவன். என்றாலும் மற்றப் பெண்களை விட இவள் மாறுபட்டவன் என்ற எண்ணம் மட்டிலும் அவனுக்கு ஏற்பட்டிருந்தது. சாந்தாவா இப்படித் தேம்பி அழுகிறாள்? அவளுக்கு இப்போது என்ன வந்து விட்டது? தனக்காகவா அவள் அழுகிறாள்? இது உண்மைதானா?



''என்ன? இது செட்டியார் கொடுத்ததா?''

''சரிதான், அவர் சும்மாக் கொடுத்து விடுவாரா? நானே சண்டை போட்டு வாங்கிக் கொண்டேன்!''

தவியாய்த் தவித்தான் முருகையன். 'இவளுக்கு எப்படி ஆறுதல் கூறுவது? எப்படி இவள் அழுகையை நிறுத்துவது? எப்படி இவளைத் தேற்றி வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பது? அட, கடவுளே!'

கடவுள் மனமிரங்கி அந்த வேளையில் ஒரு வாடகைக் காரை அந்தப் பக்கம் அனுப்பி வைத்தார். கை தட்டி அதை நிறுத்தி விட்டு, ''வா, சாந்தா! சாந்தாவுக்கே இவ்வளவு கோபம் வரலாமா?'' என்று அவளைக் கெஞ்சுவது போல் அழைத்தான். ''நான், நீ சொல்கிறபடியே கேட்கிறேன் வா!'' என்றான். சாந்தா எழுந்து முகத்தைத் துடைத்துக் கொண்டு காருக்குள் அமர்ந்தாள். அவனும் அமர்ந்தான். கார் டிரைவர் வீட்டு விலாசத்தைக் கேட்டு விட்டு, அவர்கள் இருவரும் கணவன் மனைவி என்ற கருத்தோடு பேசிக் கொண்டே காரை ஓட்டிவந்தான். முருகையனுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. அவன் கழுத்தைப்பிடித்துநெருக்கி, 'பேசாமல் போ!' என்று சொல்ல நினைத்தான். அதற்குள் வீடும் வந்து விட்டது.

வீட்டுக் கதவைத் தட்டினாள் சாந்தா. முருகையன் வெளி அறையைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்து விளக்கைப் போட்டான். உட்பக்கத்திலிருந்து சாந்தாவுக்குக் கதவைத் திறந்து விட்ட முதல் குடித்தனக்கார அம்மாள் சாந்தாவைப் பார்த்த பார்வையில் ஏதோ உட்பொருள் இருந்தது.

''சினிமாவுக்குப் போயிட்டு வர்றீங்க போலிருக்கு?'' என்று ஏளனமான குரலில் சாந்தாவை வரவேற்றாள் அந்தக் குடித்தனக்கார அம்மாள்.

முருகையனுக்கோ அன்றைக்கு நடந்த நிகழ்ச்சி போல் சினிமாவில் கூட வர வேண்டாம் என்று தோன்றியது. சட்டையைக் கூடக் கழற்றாமல் விளக்கை அணைத்து விட்டுத் தரையில் சாய்ந்து விட்டான். (தொடரும்)

# காஸ்ட்ரால் பராமரிப்பு

## உங்கள் எஞ்சினைப் பாதுகாக்கிறது

Castrol

பியட், அம்பாஸ்டர் மற்றும் ஸ்டாண்டர்ட் கார்கள் சொந்தக்காரர்களுக்கு

# இலவசம்!

## லூப்ரிகேஷன் அட்டவணை




இப்பொழுதே இந்தக் கூப்பனைத் தபாலில் அனுப்புங்கள்

தயவு செய்து..............லூப்ரிகேஷன் அட்டவணைப் பிரதியை அனுப்பவும்

பெயர்..............................................................

விலாசம்............................................................

கூப்பனை அனுப்புமிடம் காஸ்ட்ரால் லிட்.,
G. P. O. பெட்டி நெ. 430, பம்பாய்—1.

எப்பொழுதும் காஸ்ட்ரால் என்று பெயர் சொல்லிக் கேளுங்கள்.






இரண்டு கிரிக்கெட் ரஸிகர்கள், இந்திய ஜனாதிபதி கிரிக்கெட் கோஷ்டியினருக்கும் இங்கிலாந்து எம். ஸி. ஸி. குழுவினருக்கும் ஹைதராபாத்தில் நடைபெற்ற ஆட்டத்தின் போது, ரேடியோவில் கிரிக்கெட் விமர்சனம் கேட்டுக் கொண்டே பலத்த விவாதத்திலும் மூழ்கியிருந்தனர்.

''இந்தத்தடவையும் ஆட்டம் வெற்றி தோல்வியின்றி முடிந்துவிடப் போகிறது!'' என்றார் ஒருவர் சுவாரசியமில்லாமலே.

ஆட்டம் விறுவிறுப்புடன் நடப்பதைக் கண்டு, ''இல்லை இந்திய கோஷ்டி வெற்றி பெறும், பாருங்கள்!'' என்றார் மற்றொருவர்.

''நிச்சயமில்லை. பந்தயம் பத்து ரூபாய்...''

''பார்க்கலாம்! நானும் பத்து ரூபாய் கட்டுகிறேன்!''

இப்படி இவர்கள் போட்டி போட்டுக் கொண்டிருக்கும் போது ஆட்டம் எதிர்பாராதவிதமாக முடிந்து எம். ஸி. ஸி. கிரிக்கெட் குழுவினருக்கு வெற்றி கிட்டி விட்டது.

'' அட பாவமே! நாமிருவரும் எதிர்பார்த்ததற்கு மாறாக முடிவு ஏற்பட்டு விட்டதே. இது ஓவலில் நடந்த 'ஆஷஸ்' டெஸ்ட் மாதிரியல்லவா முடிந்து விட்டது!'' என்று அவர்கள் இருவரும் ஆச்சரியப்பட்டனர்.

அவர்கள் ஆச்சரியம் கிடக்கட்டும். 'ஆஷஸ்' என்ற ஒரு வார்த்தையை அவர்கள் தூக்கிப் போட்டார்களே? அதற்கு என்ன அர்த்தம்...? சாம்பல் என்ற பொருளுள்ள இந்த ஆஷஸுக்கும் கிரிக்கெட்டுக்கும் என்ன சம்பந்தம்?' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

அதற்கு 1882ம் வருஷம் ஓவலில் நடைபெற்ற ஆஸ்திரேலிய இங்கிலாந்து டெஸ்ட் பந்தயத்துக்குச் செல்ல வேண்டும்.

அன்று நடந்த டெஸ்ட் பந்தயத்தைப் போல் மக்களுக்கு உணர்ச்சியூட்டிய பந்தயம் வேறு இல்லை என்று சொல்லி விடலாம்.

ஆஸ்திரேலியா, இங்கிலாந்து கோஷ்டியினர் இருவருமே நன்றாக ஆடிக் கடைசி வரையில் யார் வெற்றி பெறுவார்கள் என்று நிர்ணயிக்க முடியாமல் இருந்தது. அன்று நடந்த பந்தயத்திலே மாட்ச் முடிவுறும் தருவாயிலே யாரெல்லாம் பொறுமையுடன் நன்றாக ஆடுவார்களென்று எதிர் பார்த்தார்களோ, அவர்களெல்லாம் கைபதறிப் போனார்கள். சிலர் குளிரினால் நடுநடுங்கிப் போனார்கள். மற்றும் சிலர் மயக்கம் போட்டே விழுந்து விட்டார்கள்.

அங்கு சமீப காலத்தில் மழை ஏற்பட்டதனால் முதல் இன்னிங்க்ஸில் ஆஸ்திரேலிய கோஷ்டி 63 ரன்களே எடுத்தது. ஆனால் இங்கிலாந்து கோஷ்டி 101 ரன்களை எடுத்துவிட்டது. இரண்டாவது இன்னிங்க்ஸில் பந்தயம் வெகு வேகமாக முன்னேறி பிரிட்டிஷ் கோஷ்டி 85 ஓட்டங்கள் எடுத்து விட்டால் வெற்றி அதற்குக் கிடைத்துவிடும் என்ற நிலைமை இருந்தது. நினைத்தபடி எல்லாம் நடந்து விடுமா?

இங்கிலாந்து கிரிக்கெட் கோஷ்டியில் கடைசி ஆட்டக்காரரான 'பியட்' ஆடிக் கொண்டிருந்தார். பந்தையடிப்பதிலே இவரே மோசமானவர் என்று பேர் வாங்கினவர்! பத்து ரன்கள் இங்கிலாந்து கோஷ்டி எடுத்துவிட்டால் அன்று அது வெற்றி பெற்று விடும். பியட் இரண்டு ரன்கள் எடுத்து விட்டார். இங்கிலாந்து வெற்றி பெற்று விடும் என்ற எண்ணத்தில் ஆங்கில கிரிக்கெட் ரசிகர்கள் ஆஹாகாரமும், கரகோஷமும் செய்யத் தொடங்கி விட்டனர். அந்தச் சமயத்தில் பியட் விக்கெட்டைப் பந்து வீச்சு நிபுணர் பாயல் வீழ்த்தி விட்டார்.

இங்கிலாந்து கோஷ்டிதான் வெற்றி பெற்று விட்டது என்று கருதி மக்கள் ஆரவாரமிடத் தொடங்கினர். ஆனால் ஆஸ்திரேலியக் கோஷ்டியே இறுதியில் வென்றது என்றறிந்ததும் ஒரு நிமிஷம் அவர்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவர்கள் முகம் தொங்கிப் போய் விட்டது. ஆனால் அடுத்த கணம் பிரமிப்பிலே அவர்களையறியாமல் ஆஸ்திரேலி

யர்களுக்காகவும் பலமாகக் கைதட்டத் தொடங்கி விட்டனர். கடைசியில் எதிர்பாராத விதமாக வென்றதனால் ஆஸ்திரேலியக் கோஷ்டியின் பெருமை உயர்ந்து விட்டது.

* * *

இங்கிலாந்து கிரிக்கெட் கோஷ்டியின் ஆட்டக்காரர் பியட் மைதானத்தை விட்டு உள்ளே வந்ததும் காப்டன் கிரேஸ் அவரை ஜாக்கிரதையாக ஆடாததற்காகவும், மற்றொரு ஆட்டக்காரரான ஸ்டட் வேண்டிய ரன்களை எடுக்க ஒத்துழைக்காம விருந்ததற்காகவும் கோபித்துக் கொண்டார். அப்போது பியட் அவருக்கு என்ன பதில் சொன்னார், தெரியுமா?

"எனக்கு ஸ்டட்டின் மீது நம்பிக்கையில்லை. ஆகவே நானே என்னாலானதைச் செய்யத் தீர்மானித்து ஆடினேன்!" என்றார் சிரித்துக் கொண்டே. அதைக் கேட்டு எல்லாரும் நகைத்து விட்டனர்; ஆம்! இங்கிலாந்திலேயே மிக அற்புதமாகப் பந்தையடிப்பவர் என்று புகழ் பெற்றவர் ஸ்டட்! அந்தப் பிரபல ஆட்டக்காரரிடமே பியட்டுக்கு நம்பிக்கையில்லையென்றால் அது கேலிக்கூத்துத் தானே?



"நம்ப ராமானுஜம் செத்துப் போனபோது தன் வீட்டிலே இருந்ததையெல்லாம் அனாதாசிரமத்துக்கு விட்டுட்டுப் போய் விட்டார்!"
"அப்படியா? எவ்வளவு ரூபாய் இருக்கும் சுமாராக?"
"ரூபாயா? அவர் தமது ஏழு குழந்தைகளை விட்டு விட்டுப் போனதைன்னு சொன்னேன்!"

எல்லோரையும் திகைக்க வைக்கும் முறையில் ஓவல் டெஸ்டில் ஆஸ்திரேலியக் கோஷ்டி ஜயம் பெற்றதைப் பற்றிப் பத்திரிகைகள் பலவிதமாக எழுதின. மறு நாள் லண்டனில் உள்ள ஸ்போர்ட்டிங் டயம்ஸ் என்ற பத்திரிகையில் கீழ்க்கண்ட ஒரு ரஸமான செய்தி வெளியாகி யிருந்தது:

ஆங்கில கிரிக்கெட்டின் இனிய ஞாபகார்த்தமாக..

அது ஓவலில் 1882ம் வருஷம் ஆகஸ்ட் 29ந் தேதி இவ்வுலகை விட்டுமறைந்தது.

அதன் மறைவைக் குறித்து நண்பர்களும் தெரிந்தவர்களும் மிகவும் வருந்துகின்றனர்.

குறிப்பு: உடல் எரிக்கப்பட்டு, அதன் சாம்பல் (ஆஷஸ்) ஆஸ்திரேலியாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டது!

இதற்குப் பிறகு 'ஆஷஸ்' என்ற பதம் கிரிக்கெட் உலகில் நிரந்தர இடம் பெற்று விட்டது! இங்கிலாந்து, ஆஸ்திரேலிய கிரிக்கெட் டெஸ்ட் பந்தயங்களில் யார் வெற்றி பெறுகிறார்களோ, அவர்களுக்கு 'ஆஷஸ்' கிடைத்து விட்டது என்று கூறுவது இப்பொழுது சம்பிரதாயமாகி விட்டது.

## விளையாட்டுக் கலை மலர்கள்

விளையாட்டுக் கலை என்றதும் நமக்கு 'ஸ்போர்ட் அண்ட் பாஸ்டைம்' பத்திரிகை நினைவுக்கு வருகிறது. இப் பெருமைக்குரிய இப் பத்திரிகை வழக்கம்போலவே இந்த வருஷமும் மலர் ஒன்று வெளியிட்டிருக்கிறது. இதில் விளையாட்டு மன்னர்களின் வர்ணப் படங்களும், விளையாட்டு பற்றிய கட்டுரைகளும், வெள்ளித் திரைக் கலைஞர்களின் வண்ணப் படங்களும் வெளிவந்திருக்கின்றன. பிராங்க் வொரல் பற்றி ஜாக் பிங்கில்டனும், பாகிஸ்தான் கிரிக்கெட் ஆட்டக்காரரான சையத் அகமது பற்றித் திரு குருநாதனும், டென்னிஸ் வீரர் கிருஷ்ணன் பற்றித் திரு நரசிம்மனும் ரஸமான கட்டுரைகள் வழங்கியுள்ளனர். இந்த அழகான மலரின் விலை ரூ. 2.

பத்தாண்டுகளுக்குப் பிறகு இங்கிலாந்திலிருந்து எம்.ஸி.ஸி. கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் இந்தியாவுக்கு வந்திருக்கின்றனர். அவர்களையும் இந்திய கிரிக்கெட் வீரர்களையும் பற்றித் தெரிந்து கொள்ளும் வாய்ப்பை 'எம். ஸி. ஸி. கிரிக்கெட் ஆட்டக்காரர்கள்' என்னும் நூல் அளிக்கிறது. ஒரே ரூபாய் விலையில் கைக்கடக்கமான இன்னொரு புத்தகமும் வெளியிட்டுள்ளது.


THE INDIAN OVERSEAS BANK LIMITED. MADRAS
IOB



# வட்டமேஜை

## 'துணி'கரமான தமிழ்க் கொலை!

வருடா வருடம் காந்தி ஜெயந்தி தினத்தில் பம்பாய் கதர் கிராமக் கைத்தொழில் கமிஷன் அலுவலகத்தின் மூலம் காதி ஹூண்டி விற்பனை செய்யப்படுகிறது.

இந்தக் காதி ஹூண்டி என்பது "நாசிக்" அச்சுக்கூடத்தில் அச்சடிக்கப்பட்ட ரூ. 5, 10 100 விலை மதிப்புள்ள காகிதம். ரொக்கம் கொடுத்துத்தான் அதை வாங்க வேண்டும். அக்காகிதத்தை வாங்கியவர் கதர் விற்பனை நிலையத்தில் கொண்டு போய் அதைக் கொடுத்தால், ஹூண்டி குறிக்கும் ரூபாய்க்குக் கதர்த் துணி வாங்கிக் கொள்ளலாம். கதர் மீது அபிமானமுள்ளவர்கள் தங்களுக்குத் தேவைப்பட்டால் பணம் கொடுத்தே துணியை வாங்கிவிட முடியும். அப்படி இருக்கும்போது இந்த ஹூண்டிக்கு என்ன அவசியம் வந்தது? ஹூண்டியைக் கொடுத்துத் துணி வாங்குபவர்களுக்கு ஏதாவது சலுகை உண்டா என்றால் ஒன்றுமில்லை. நேராக மூக்கைத் தொடுவதற்குப் பதில் தலையைச் சுற்றிக்கொண்டு மூக்கைத் தொட்ட கதையாகத்தான் உள்ளது இது.

இந்த அழகான ஹூண்டி சம்பந்தப்பட்ட ஒரு தமிழ் விளம்பரத்தை ஓரிடத்தில் பார்க்க நேர்ந்தது. அவ்விளம்பரம் பம்பாயில் அச்சடிக்கப்பட்டு, பல கதர் உற்பத்தி விற்பனை கேந்திரங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. அதில் உள்ள வாசகங்கள் வருமாறு:

"இயறகையின் கொடுமையின்
பொழுது உதவுதல்"
"வெள்ளக கொடுமை"
"கதர் வாங்குஙகள்"

"ஹூண்டி அல்லது கதர் உடுக்கும் துணி"- இவற்றிலுள்ள வார்த்தைகளை எண்ணிப் படித்து அதனுடைய பொருளை யாராவது விளக்கிக் கூறினால் நல்லது.

ஹூண்டி என்ற ஒரு வேலையில்லாத வேலைக்குத் தமிழைக் கொலை செய்து ஒரு விளம்பரம் அச்சடிக்க வேண்டுமா? இதற்கெல்லாம் பொதுப் பணத்தை வாரி யிறைப்பதைப் பற்றி யாரிடம் கேட்பது?

"கதர் அபிமானி"

## உணவுத் திட்டத்தில் ஏய்ப்பம்!

பள்ளிகளில் விநியோகிக்கப்படும் பால் பவுடர், பிற உணவுப் பொருள்கள் சம்பந்தமாக நடக்கும் ஊழல்களைத் தவிர்ப்பதற்கான மசோதா ஒன்று தமிழ்நாடு சட்ட சபையில் தாக்கல் செய்யப்பட்டிருப்பதாக இன்றைய செய்தித் தாள்களில் காணப்படுகிறது. புதிது புதிதாகச் சட்டங்களை இயற்றி விளம்பரம் தேடுவதில் அதிக அக்கறை காட்டும் அரசாங்கத்தார் ஏற்கெனவே அமுலில் உள்ள சட்டங்களின் நடைமுறைகளில் காணப்படும் எண்ணற்ற ஊழல்களைப் பற்றி ஒரு சிறிதும் கவனம் செலுத்துவதாகத் தெரியவில்லை.

உதாரணமாக மதிய உணவுத் திட்டத்தை எடுத்துக் கொண்டால் அது, அரசாங்கத்தினரின் பல்வேறு துறைகளிலும் நீக்கமற நிறைந்துநிற்கும் விளம்பர மோகம், நாணயக் குறைவு, பொய்ப்பிரசாரம், தவறான தகவல், பண விரயம், சுய ஏமாற்றம் முதலிய குறைபாடுகளுக்கு ஓர் எடுத்துக்காட்டேயாகும்.

இத்திட்டத்துக்காக அரசினர் தரும் மானியத் தொகையில் ஒவ்வொரு 6 ந. பைக்கும் 4 ந. பை. வீதம் பொதுமக்களிடமிருந்து நன்கொடையாகப் பெற வேண்டுமென்று உத்தரவு. பெறப்படுவதாகக் காட்டுகிறார்கள். இதை நிரூபிக்கப் புள்ளி விவரங்களோ அரசாங்கத்திடம் ஏராளமாக உள்ளன; ஆனால் எந்தக் கிராமத்திலும் இவ்வாறு வசூல் ஆவதென்பது கிடையாது.

மேலும் ஒவ்வொரு காலாண்டுத் தொடக்கத்திலும் அந்தக் காலத்தில் தோராயமாகப் போடக் கூடிய சாப்பாடுகளின் எண்ணிக்கையின் பேரில் அரசினர் மானியத்தில் ஒரு கணிசமான பகுதியை முன்பணமாகப் பள்ளிக்கு வழங்குவது என்று ஏற்பாடு. ஆனால் உண்மையில் இம்மாதிரி முன்பணம் தரப்படுவதில்லை. எடுத்துக் காட்டாக இந்தக் காலாண்டுக்கு நவம்பர் 15ஆம் தேதி ஆகியும் இன்னும் முன் பணம் தரப்படவில்லை. இதனால் பல பள்ளிகளில் உணவு வழங்குவதும் நிறுத்தப்பட்டு விடுகிறது. ஆனால் காலாண்டின் இறுதியிலோ வென்றால் இப்படி உணவு போடப்படாத காலத்துக்கும் உணவு வழங்கியதாகக் கணக்குக் காட்டி அந்தத் தொகையும் 'மறைந்து' போய் விடுகிறது. தனிக்கை அதிகாரிகளுக்குத் திட்டம் வெற்றி பெற்றதாகக் காட்ட வேண்டும் என்பதில் தான் குறி. அதோடு அரசினரின் நிர்ப்பந்தம் வேறு. எனவே பொய், புரட்டு, ஊழல் ஆகியவை புகுவதற்கு வாய்ப்பே இல்லாத கல்வி நிலையங்களும் பொய்க் கணக்கு, பொய்த் தகவல் ஆகியன தயாரிக்கும் இடங்களாகி விட்டன. நேர்மையான முறையில் ஒரு சிறு விசாரணை நடத்தினாலே இந்நிலை எளிதில் விளங்கும்.

இந்த இலட்சணமான திட்டத்தைக் குறித்துப் புதுப்புதுச் சட்டங்கள் இயற்றி மட்டும் என்ன பயன்?

ஒட்டன் சத்திரம்
16-11-61

மா. குருசாமி

## கேந்தியின் கேள்வி!

நீலகிரி மாவட்டத்தில் உதகை, குன்னூர் முதலிய நகரங்களுக்கு அடுத்தபடி ஜனத்தொகையில் பெரியது எங்கள் கேத்தி கிராமம். இங்குள்ளது ஒரே ஆஸ்பத்திரி. அதிலும் டாக்டர் கிடையாது. ஆறு மாதங்களுக்கு முன்பு ஒரு கம்பவுண்டர் இருந்ததாகக் கேள்வி. இப்போது இந்த ஆஸ்பத்திரியில் பக

வில் மோகினிப் பிசாசுகளும் இரவில் கொள்ளி வாய்ப் பிசாசுகளும் பவனி வருவதாக வதந்தி.

வீட்டுக்கொரு பள்ளிக்கூடமும் வீதிக்கொரு ஆஸ்பத்திரியுமாகத் தொடங்குவதாகச் சொல்லப்படும் தமிழகத்தில்தானே நாங்களும் இருக்கிறோம்?

கேத்தி கிராமம்
16-11-61 என். கரியபெட்டன்

## தொழில் மாணவருக்கு எங்கே தொழில்?

நாடு தொழில் வளம் பெற வேண்டும், தொழிற் கல்விக்கூடங்கள் அதிகரிக்க வேண்டும் என்று வாய் கிழியப் பிரசாரம் செய்யும் நமது மாநில, மத்திய அரசினர் இத்தொழிற் கூடங்களில் படித்துத் தேறி வெளிவரும் மாணவர் வேலை பெறுவது பற்றிக் கவலைப் படுவதாகத் தெரியவில்லை. மாவட்டத்துக்கு ஒரு தொழிற் கல்வி நிலையம் வீதம் நம் மாகாணத்தில் நிறுவப்பட்டுள்ளது. இதிலிருந்து தேறி வரும் ஒரு சாராராகிய எல். ஸி. இ. மாணவர்களுக்குப் பொதுப்பணித் துறை, பெருவழித் துறை ஆகியவற்றில் வேலை வாய்ப்புக்கள் வர வரக் குறைந்து விட்டன. காரணம் சிறிய வேலைகளுக்கெல்லாம் கூட பி. இ. (சிவில்) படித்துத் தேறிய மாணவர்கள் அமர்த்தப்பட்டு விடுகிறார்கள். ஆகையால் எல்.ஸி.இ. மாணவர்களுக்குத் தொழில் மேஸ்திரி வேலை கிடைப்பதுகூடத் துர்லபமாயிருக்கிறது. சென்னை பப்ளிக் சர்வீஸ் கமிஷனும் பொது வழித் துறையில் செக்ஷன் அதிகாரிகளாகப் பணியாற்ற எல். ஸி. இ. க்களை நியமிக்காமல் பி. இ.க்களையே தேர்ந்தெடுக்கின்றனர். இந்தத் தொல்லை தீரும் நாள் எப்போதோ?

சென்னை
17-11-61 எஸ். வெங்கடேசன்

## நிர்வாகத்தின் "சுறுசுறுப்பு"

நான் ஒரு பத்திரிகை நிருபர். சில காலம் முன் எங்கள் ஊர்ப் பஞ்சாயத்தின் மாதாந்திரக் கூட்ட நிகழ்ச்சி நிரல் கேட்டபோது, கொடுக்கச் சட்டம் இல்லை என்றார் நிர்வாக அதிகாரி. அதன் மீது 2-4-59ல் நான் சென்னை சர்க்கார் காரியதரிசிக்கு எழுதினேன். இதையொட்டி முனிசிபல் கௌன்சில்ஸ் அண்ட் லோகல் போர்ட்ஸ் இன்ஸ்பெக்டர் ஆபீசிலிருந்து நிகழ்ச்சி நிரல் தருமாறு நன்னிலம் பஞ்சாயத்துத் தலைவருக்கு எழுதப்பட்டது. அப்படியும் அவர் கொடுக்க மறுத்தார். மீண்டும் எழுதினேன் மேலிடத்துக்கு. அதன்மீது நன்னிலம் பஞ்சாயத்துத் தலைவரை நிகழ்ச்சி நிரல் நகல் கொடுக்கும்படிக்கும் முன் கடிதப்படி கொடுக்காததின் காரணத்தைத் தெரிவிக்கும்படியும் அவர்கள் எழுதினார்கள். அதன் பிறகும் நிகழ்ச்சி நிரல் கிடைக்காததால் ஐ. எல். பி. ஆபீசுக்கு எழுதினேன். அதற்குப் பதிலாக அவர்கள் என் விஷயம் குறித்த கட்டு முழுதும் தஞ்சை மாவட்ட கலெக்டருக்கு அனுப்பப்பட்டுவிட்டது என்று தெரிவித்தார்கள். நான் 7-8-61 தஞ்சாவூர் கலெக்டருக்கும் எழுதினேன். 16-8-61ல் பதில் கிடைத்தது.—''விஷயம் கவனிக்கப்பட்டு வருகிறது'' என்று. இந்தக் கடிதம் வந்து மூன்று மாதங்கள் ஆகின்றன. எவ்வித பதிலும் இல்லை. நானும் தொடர்ந்து 6-9-61 16-10-61, 8-11-61ல் ஞாபகக் கடிதங்கள் எழுதி விட்டேன். ஒரு சின்ன சமாசாரம் இரண்டரை ஆண்டுகளுக்கு மேலாக முடிவடையாமல் இருப்பது என்றால் நிர்வாகம் எத்தனை சுறுசுறுப்பாக நடைபெறுகிறது என்பது தெளிவாகிறது அல்லவா?

நன்னிலம்
14-11-61 பி. ராஜாராமன்

## தலைகீழ்ப் பாடமா?

நவம்பர் 19-ந் தேதி 'கல்கி'யில் வெளியாகியுள்ள ''கம்யூனிஸப் பாதையில் மேலுமோர் அடி'' என்ற உப தலையங்கம் நேருஜியின் கம்யூனிஸக் கொள்கை வலுப் பெறுவதற்காகச் செய்யப்படும் மாறுபாடுகள் நாட்டின் நலனுக்கு உகந்தவை அல்ல என்பதைப் பறைசாற்றுகிறது. கேரளத்தில் கம்யூனிஸ்ட் கட்சி, ஆட்சியிலிருந்தபோது பாடப் புத்தகங்களை வெளியிட முற்பட்டபோது அதனைக் கண்டித்த அதே காங்கிரஸ் தலைவர்கள் அந்த முறையை இன்று தாங்களே கையாள முனைவது விந்தையாக இருக்கிறது.

திருநெல்வேலி
10-11-61 நெல்லையப்பன்

அட்டைப்படக் கதை

# தில்லைவனம் போட்ட திட்டம்

தாமரைமணாளன்

வீட்டு வாசலில் 'திட்டநாயகம் தில்லைவனம்' என்று தொங்கும் பெயர்ப் பலகையைப் பார்த்து விட்டு யாரும் சந்தேகப்பட்டு மலைத்து நின்றுவிட வேண்டியதில்லை. உள்ளே யிருப்பது இந்திய அரசாங்கத் திட்டக் கமிஷன் அதிகாரி யாருமில்லை. கோவிந்தா பாங்க் குமாஸ்தா திருவாளர் தில்லைவனம்தான் நெற்றியைத் தேய்த்து விட்டுக்கொண்டு சிந்தனை மயமாக உட்கார்ந்திருப்பார். ஆனால் விஷயம் தெரியாமல் யாரும் அவரிடம் தன் சந்தேகத்தைக் கேட்டு விட்டாலோ, அவ்வளவுதான். "அது யாரையா திட்டக் கமிஷன் அதிகாரி? என்னை விடப் பெரிதாகத் திட்டம் போட்டுக் காரியம் செய்யக் கூடியவரா அவர்?" என்று முகத்தில் அறைவது போல் எரிந்து விழுந்து விடுவார்.

பார்க்கப்போனால் எந்தத் திட்டத் துறை அதிகாரிக்கும் தில்லைவனம் குறைந்தவரல்ல. அவர்களுக்கு மிஞ்சிப் போனால் பதினைந்து வருட அனுபவம் இருக்கும். ஆனால் நம்மவருக்கோ திட்டமிட்டுச் செயலாற்றும் விஷயத்தில் இது வரை முப்பது வருட சர்விஸ்-அதாவது அவருக்கு விவரம் தெரிந்த நாள் முதலாகக் கணக்கிட்டுப் பார்த்துக் கொண்டால்.

அற்ப சொற்பமானதானாலும் சரி, அதிவீரச் செயல்களானாலும் சரி, எந்த ஒரு விஷயத்தையும் பூர்வாங்கமாக ஒரு தடவைக்கு நான்கு தடவைகள் யோசனை பண்ணி ஒரு முடிவுக்கு வந்த பிறகே அதைச் செய்யத் தொடங்குவார். (நான்கு தடவைகளிலும் நான்கு விதமான அபிப்பிராயங்கள் தோன்றினால் திருவுளச் சீட்டுப் போட்டு ஒரு முடிவுக்கு வருவார்.) சிறு வயசிலேயிருந்தே அந்தக் கொள்கை. 'காப்பி' யடிக்கப் போதிய வசதி யிருக்காது என்று கண்டுணர்ந்து முன் யோசனையுடன் பி. ஏ. பரீட்சைக்குப் பணம் கட்டாமல் படிப்புக்கு முழுக்குப் போட்டது முதல் எத்தனையோ நிகழ்ச்சிகளை உதாரணங்களாகக் குறிப்பிடலாம்.

ஆனால் வெகு காலமாகவே அவருடைய குணசித்திரம் பூரணத்வம் அடையாமலே இருந்து வந்தது. அதற்குக் காரணம் அவருடைய தாம்பத்தியத்தில் பெரியதொரு பலவீனம் இருந்ததுதான். வெளித் துறையில் அதியற்புதமான திட்டங்கள் தீட்டி அபார வெற்றிகள் கண்டிருந்த தில்லைவனத்தின் சாகசங்கள் உள்துறையில், அதாவது அவருடைய மனைவி நீலாவின் சந்நிதானத்தில் மட்டும் எடுபடவே யில்லை. சம்சார பந்தத்தில், 'மிகவும் உண்மையும் கீழ்ப்படிதலுமுள்ள' கணவன் என்ற அந்தஸ்துதான் அவர் நிலை. அதோடு, அவருடைய புத்திசாலித்தனத்தையும் முன் யோசனையான செயல்களையும் எந்தச் சந்தர்ப்பத்திலும் நீலா ஏற்றுக் கொண்டதே யில்லை.

இது சாதாரணமாக எல்லாக்கிரஹஸ்தர்களுக்கும் சம்பவிக்கக் கூடியதுதான் என்றாலும் தில்லைவனத்துக்கு அது பெருங் குறையாகவே இருந்தது. அதிலும் முன்நிலையை விட இரண்டாவதுதான் ரொம்பவும் அவரை வருத்தியது.

அந்தக் குறையைக் களைய அருமையானதொரு சந்தர்ப்பம் சமீபத்தில் ஒரு வாரத்துக்கு முன் அவருக்குக் கிடைத்தது. வீரத்துடன் இல்லாவிட்டாலும் அருமையான ராஜதந்திரத் திட்டங்களுடன் அதைச் சமாளிக்கத் தில்லைவனம் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தவை:

திடீரென்று அவருடைய ஏழு வயதுக் குமாரனை பாபுவுக்குப் பம்பரம் ஆட வேண்டுமென்று ஆசை தோன்றி விட்டது. "ஏங்க, நம்ப பாபு ரொம்பப் பிரியப் படுகிறான். அவனுக்குப் பம்பரம் ஆடக் கற்றுக் கொடுங்கள்" என்று உத்தரவு பிறப்பித்தாள் நீலா.

முதலில் கொஞ்சம் திணறி விட்டார் தில்லைவனம். ஏனென்றால் தில்லைவனத்தின் யோக்கியதாம்சங்களைப் பொறுத்த அளவில் அவரால் ஒப்புக்கொள்ள முடியாத 'கேஸ்' இது. அவர் ஆங்காங்கே பம்பரம் என்ற வஸ்துவைப் பார்த்திருக்கிறாரே யொழியத் தமது முப்பத்தைந்து வருட ஜீவியத்தில் ஒரு நாளாவது அதைக் கையில் தொட்டுப் பார்த்தவரல்லர்.

இருந்தாலும் உத்தரவு நீலாவிடமிருந்து பிறந்திருக்கிறது என்பதற்காக மட்டுமல்லாது, தம் திறமையை வெளிப்படுத்துவதற்காகவும் பயிற்சிப் பணியை மேற்கொண்டார். பம்பரப் பிரச்னையை முழுக்க முழுக்கத் தமக்கு ஆகிவந்த திட்டபூர்வமான முஸ்தீபுகளாலேயே சமாளிக்கத் தலைப்பட்டார்.

பாபுவையும் கலந்தாலோசித்ததன் பயனாக எடுத்த எடுப்பிலேயே அருமை யான உபாயம் தோன்றிவிட்டது. அதா வது அந்தத் தெருவிலேயே பம்பர விளையாட்டில் பிரக்கியாதி பெற்றிருக் கும் முத்து என்ற பையனைக் கொண்டு அவர் சார்பில் பம்பரப் பயிற்சி நடத் தித் தான் பெயரைத் தட்டிக் கொள் வது. இது அரசியல் முதல் அடுப்பங் கரைவரை வெற்றிகரமாகப் பலனளித்து வரும் தந்திரமாயிற்றே!

உடனடியாக முத்துவைப் பேட்டி காணப் புறப்பட்டார். வல்லரசுத் தலை வர்களைச் சந்திப்பதை விடச் சிரம சாத்தியமாக இருந்தது, முத்துவைச் சந்திப்பது.

தெருக் கோடியிலிருந்த மைதானத் தில் நாலு ஆட்டம் பம்பரம் ஆடி ஐந்து பேரிடம் சண்டை போட்டு, மூன்று பேருடைய மூக்கைத் தன் பம்பரத்தால் உடைத்து அனுப்பி விட்டு ஒரு வழி யாகத் தன் விளையாட்டை முடித்துக் கொண்டு முத்து வரும்வரை, காரிய சித்தியே கடுமையாக மனத்தை ஒருமைப் படுத்திக் கொண்டு ஒரு மூலையில் காத் திருந்தார் தில்லைவனம்.

பையனின் நடவடிக்கைகள் அவ் வளவு உற்சாக மூட்டக் கூடியனவாக அவருக்கு இல்லைதான். எனினும் திட்ட மிட்டு ஒரு காரியத்தை ஆரம்பித்தபிறகு பின்வாங்குவது அவர் வழக்கம் இல்லை. அதிலும் இது நீலா சம்பந்தப்பட்ட காரியம்! நிர்ப்பந்தம் தவிர, மகத்தான பெயரையும் அவர் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற சமாசாரம்.

பையன் 'ஒரு மாதிரி'யாகத் தோன்றி யதால், சாதுர்யமான பேச்சால் அவனை வளைத்துவிடத் திட்டமிட்டார்.

பேட்டி ஆரம்பமாகியது. பையனின் வீர தீரப் பராக்கிரமங்களைப் பற்றியும், பம்பர விளையாட்டைத் தேசிய மயமாக்கி அதற்கு அவனை டைரக்டராகப் போட வேண்டியதன் அவசியத்தைப் பற்றியும் வெகு நேரம் பேசினார். கடைசியாக, ''தம்பி, எங்க பாபுவுக்கு நீ கொஞ்சம் பம்பரம் ஆடச் சொல்லிக் கொடுக்க வேண்டும்'' என்று விநயமாகத் தம் கோரிக்கையைச் சமர்ப்பித்தார்.

அவருடைய துதிகளை யெல்லாம் பெருமையுடன் கேட்டுக் கொண்டிருந்த முத்துவின் முகம் அவருடைய வேண்டு கோளைக் கேட்டதும் காரியார்த்த கம் பீரமாக மாறியது.

''பார்க்கலாம்'' என்றான் மிகவும் அழுத்தமாக.

''தம்பி, அப்படிச் சொல்லக்கூடாது. கட்டாயம் செய்யணும். அதோடு பாபு வோட அம்மாவிடம் நான்தான் சொல் லிக் கொடுப்பதாகவும் சொல்லணும்.''

பையன் சிறிது நேரம் சிந்திப்பவன் போலிருந்தான். பின், ''அப்படியானால், டியூஷன் பீஸ் ஜாஸ்தியாகுமே!'' என்று கூறினான்.

தில்லைவனம் திடுக்கிட்டார். டியூஷன் பீஸாவது! பையன் தெளிவாக விளக் கினான்: ''என் பேரால் சொல்லிக் கொடுக்க வேண்டுமானால் தினம் பீஸ் பத்து பைசா. அடுத்தவங்க பேரால் என்றால் இருபது பைசா!''

பட்டென்று 50-மெகாடன் குண்டு ஒன்று மண்டையில் இறங்கியது போல் இருந்தது அவருக்கு. இருபது பைசா; அதற்கு எங்கே போவது? கல்யாண மான மூன்றாம் நாள் பெட்டிச் சாவி நீலாவின் கைவசமானதற்குப் பின் அவ ருக்கும் பணத்துக்குமிடையே உள்ள நேரடிச் சம்பந்தம் அற்றுப் போயிருந் தது. காரியாலயத்தில் சம்பளத்தை வாங்கி அப்படியே நீலாவிடம் கொண்டு போய் ஒப்படைப்பதோடு சரி. அதற் குப் பின் அதன் கண்ணில் விழிக்கமாட் டார். ஒரு தடவை காரியாலயத்துக்குப் போகப் பஸ் சார்ஜுக்கென்று பணம் கேட்டதில், நடந்து போய் வருவதில் பொருளாதார சுகாதார நலன்கள் அபரிமிதமாக அடங்கியிருப்பதாகக் கூறி அவள் மானியக் கோரிக்கையை நிராகரித்து விட்டாள். அன்று முதல் தில்லைவனம் அந்தரங்க சுத்தியோடு பணத்தாசையைத் துறந்தார். இனியும் அவ்வாசையைப் புதுப்பித்துக் கொள்ளச் சாத்தியக்கூறுகள் கிடையா. இந்த நிலை யில் அவருடைய திட்டபூர்வமான நட வடிக்கையில் எதிர்பாராத விதமாகப் பொருளாதாரச் சிக்கல் ஏற்பட்டது ஒரு ஸ்தம்பித நிலையை ஏற்படுத்தி விட்டது.

இருந்தாலும் திட்டநாயகம் மனம் தளர்ந்து விடவில்லை. ''என்ன தம்பி! விளையாட்டுக்குக் காசு கேட்கலாமா? இதெல்லாம் உன்னைப் போன்ற வீரர்கள் உன்னைச் சேர்ந்த எங்களுக்குக் கௌரவ மாகச் செய்ய வேண்டிய சேவையல் லவா?'' என்று அவனுக்கு இன உணர்ச் சியை ஊட்ட முயன்றார்.

ஆனால் முத்து வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் பேசினான். ''இது விளை யாட்டு இல்லை, சார்; நம்ப தொழில். நீங்க சம்பளம் வாங்காமலா வேலை செய்யறீங்க? இப்போ கைமேல் நாலு டியூஷன் வச்சிருக்கேன் சார், சும்மா யில்லை! தெரியுமா?''

''தம்பி, எனக்கு இருபது பைசா கொடுக்க முடியாது. நீதான் கொஞ்சம்

சலுகை பண்ணணும்'' என்று நிலைமையை உத்தேசித்துக் கெஞ்ச ஆரம்பித்தார்.

அவருடைய தோற்றம் அவனுக்குப் பரிதாபத்தை உண்டாக்கியிருக்க வேண்டும். ஒரு கணம் யோசித்தான். பின், ''ஓ, நீங்க ஏழையா? அப்ப ஒரு ஐடியா சொல்றேன்,கேட்கிறீங்களா?'' என்றான்.

''என்ன?''

''உங்களுக்குக் கொஞ்சமாவது பம்பரம் ஆடத் தெரியுமா?''

''சின்ன வயசில் ஆடியிருக்கிறேன்'' என்று சந்தர்ப்பத்தை அனுசரித்துச் சொல்லி வைத்தார். பையன் அதைப் பிடித்துக் கொண்டான்.

''அப்படியானால் நீங்க என்னிடம் இரண்டு நாள் பழகுங்க. நல்லா விளையாட வந்து விடும். அப்புறம் நீங்கள் பாபுவுக்குச் சொல்லிக் கொடுக்கலாம்'' என்று கூறினான்.

அவன் யோசனையை அலசிப் பார்த்தார். தம்மை யறியாமல் ஒரு சோதனைக்குள்ளாவது போலவும் அதே நேரத்தில் பெரிய சோதனையிலிருந்து விடுபட மார்க்கம் தோன்றுவது போலவும் இருந்தது. முடிவில் பழகுவதுபோல் படித்து விடலாம் என்ற தெம்பு ஏற்பட்டது. அவன் யோசனைப்படியே விளையாட்டு ஒப்பந்தம் இருதரப்பிலும் அங்கீகரிக்கப் பட்டது.

அன்று மாலையிலேயே பாபுவுக்குப் பயிற்சி யளிக்கப் போவதாகப் பெயர் பண்ணிக் கொண்டு மைதானத்துக்குச் சென்றார் அவர்.

பம்பரமும் கையுமாக அவர் தம் குருநாதர் முன்னால் நின்றபோது தான், குருநாதர் முத்து ஒப்பந்தத்தில் இல்லாத புதிய ஷரத்து ஒன்றைப் பிரகடனப் படுத்தினான்.

''முதலில் பந்தயக் காசை வையுங்க, சார்!'' என்றான் முத்து.

''பந்தயக் காசா?'' என்று அலறினார் தில்லைவனம்.

''ஆமாம் சார், ஐந்து பைசா தான்!''

''என்ன தம்பி பந்தயம் எதுக்கு?''

முத்துவுக்குக் கோபம் வந்து விட்டது. ''என்ன சார் இது! பந்தயம் இல்லாமல் நான் பம்பரத்தைத் தொடறதே இல்லே. உங்களுக்காகப் போனால் போகட்டும்னு ஒரு வழி சொன்னால் இதுக்கும் நீங்கள் கட்டுப்படலேன்னா, நான் போறேன். இவ்வளவு நேரத்துக்குள் நான் ஒரு ரூபாய் சம்பாதித்திருப்பேன். அதைக் கொடுத்திங்க'' என்று ஆத்திரத்துடன் கூறிவிட்டு, பம்பரத்தையும் கயிற்றையும் அரைக்கால் சட்டைக்குள் திணித்தவாறு புறப்படத் தயாரானான்.

''தம்பி, கோபிக்கப்படாது. நான் காசு கொண்டு வரலே. அதனால்தான்...'' என்று அவனைச் சமாதானப் படுத்தினார் தில்லைவனம்.

''சரி அப்படியானால் கடனுக்கு ஆடுவோம்'' என்று ஒரளவு விட்டுக் கொடுத்து அவருடன் சமாதானத்துக்கு வந்தான் முத்து.

தில்லைவனத்துக்கு விழுங்கவும் முடியவில்லை; துப்பவும் முடியவில்லை. சிக்கலைத் தன் இட்ட மூளையின் ஆராய்ச்சிக்கு விட்



டுப் பார்த்தார். முதலில், 'தோற்று விட்டால்?' என்ற பயம் ஏற்பட்டது. பிறகு 'இரண்டு ஆட்டத்தில் விளையாட்டைப் புரிந்து கொண்டு இந்த வாண்டுப் பயலை ஜயிக்க முடியாதா?' என்று ஒரு நம்பிக்கை தோன்றியது. முடிவில் 'கட்டாயமாக ஜயித்து விடலாம்' என்ற உறுதி ஏற்பட்டு விட்டது. துணிவுடன் பந்தயத்தில் குதித்து விட்டார்.

ஆயிற்று இரண்டு ஆட்டம், மூன்று ஆட்டம், ஐந்தும் முடிந்து விட்டன. தில்லைவனத்துக்குப் பம்பரத்தில் கயிற்றைச் சுற்றும் சூட்சுமமே புலனாகவில்லை. ஆனால் முத்து ஐந்து ஐந்து பைசாக்கள் சேர்ந்தால் இருபத்தைந்து பைசா என்று கணக்குச் சொல்லி விட்டான்!

நிமிஷத்தில் ஏறிவிட்ட இந்தக் கடனை எப்படித் தீர்ப்பது என்ற புதுப் பிரச்னை பூதாகாரமாக உருவாகியது. நீலாவிடம் சொல்லித் தீர்க்கக் கூடியதா இந்த அவமானகரமான கடன்? தமது நடவடிக்கைகளையும் மேற்கொண்டு செய்ய வேண்டியதைப் பற்றியும் புனர்ப் பரிசீலனை செய்து பார்த்தார். மீண்டும் ஓர் ஐந்து ஆட்டம் ஆடி வெற்றிபெற்றுத்தான் கடனைக் கழித்தாக வேண்டும்!

மிகவும் ரோஷத்துடன் அடுத்த ஆட்டங்களில் ஈடுபட்டார். பத்து ஆட்டங்களும் முடிந்தது; கடனும் ஐம்பது பைசாவாக வளர்ந்து நின்றது!

இனி நம்பிக்கைக்கு இடமில்லை என்று பட்டு விட்டது தில்லைவனத்துக்கு. முத்துவும் நம்பத் தயாராக இல்லையென்பதாக ஆட்டத்தை முடித்து விட்டான். "சார், எட்டணா ஆகியிருக்கிறது. நாளைக் காலையில் குடுத்துடணும்'' என்று கூறி விட்டு அவன் நடந்து விட்டான்!

எப்படியோ ஆரம்பித்தது எங்கோ போய் நின்று விட்டது! அற்பமோ, அதிகமோ, கடன் கடன்தான்! புரோநோட்டுக் கடன் என்றாலும் அது காலாவதியாகும்வரையில் நிம்மதியாக இருக்கலாம். அது பிறக்கும்போதே அமீனாவுடன் பிறந்த கடன்! எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் அவருடைய பூஜ்ய வருமான வாய்ப்புகளுக்கு மிஞ்சிய சங்கதி!

ஏற்கெனவே ரத்தாகி யிருந்த பஸ் சார்ஜ் மானியக் கோரிக்கையை மீண்டும் நீலாவிடம் புதுப்பித்துப் பார்த்தார். அவள் பழைய உத்தரவை ஊர்ஜிதப் படுத்தி விட்டாள்.

இதற்கிடையில் முத்து கொடுத்திருந்த 'மறு நாள்' கெடு தீர்ந்து விட்டது. அவன் கடனை வசூலிக்கும் நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்த ஆரம்பித்தான். பொழுது விடிந்து அவர் ஆபீஸுக்குப் புறப்படுவதற்குள் பத்துத் தடவை வாசலில் நின்று உற்றுப் பார்ப்பான். (அவன் வீட்டுக்குள் படையெடுக்காததற்குக் காரணம், அவர் அவனிடம் முன்னேற்பாடாக மன்றாடிச் செய்து கொண்டிருந்த ரகசிய ஒப்பந்தம்தான்.) ஆபீஸுக்குப் போகும்போதும் விரட்டிக் கொண்டே போவான்.

தில்லைவனமும் வேண்டிய முயற்சிகளைச் செய்து பார்த்தார். தாம் பாரத நாட்டின் விசுவாசமான பிரஜை என்பதை நினைவுகூர்ந்து முத்துவுக்கும் அதை நினைவூட்டிப் பிரச்னையைச் சமாதான முறையில் தீர்க்க முயன்றார். தாம் சில நீண்டகாலக் கடன்களை எழுப்பிச் சில பொருளாதாரத் திட்டங்களைச் செயல்படுத்த விருப்பதாகவும், திட்டங்கள் வெற்றிகரமாக நிறைவேறியதும் அவனுடைய கடனை வட்டியுடன் திருப்பிக் கொடுத்து விடுவதாகவும் வாக்குறுதிகள் வழங்கினார். ஆனால் முத்து பரஸ்பர நல்லெண்ணத்துடன் பேச்சு வார்த்தை நடத்த மறுத்துவிட்டான்.

''இந்தாங்க சார், என்னை ஏமாற்ற முடியாது. இன்னும் மூன்று நாட்களுக்குள் கடனைக் கொடுக்காவிட்டால் உங்க வீட்டு அம்மாகிட்டே சொல்லி விடுவேன்'' என்று இறுதி எச்சரிக்கை கொடுத்து விட்டான். தில்லைவனத்தின் பேச்சுக்களிலிருந்து அவருக்கும் நீலாவுக்குமிடையே யிருந்த உறவின் தன்மையை அவனும் புரிந்து வைத்திருந்தான்.

அதுவரை 'சிவில் கேஸா'க இருந்த விஷயத்தைக் குடும்பத்தில் கலவரம் விளைவிக்கக் கூடிய 'கிரிமினல் கேஸா'க மாற்றப் போவதாக முத்து அறிவித்ததும், விஷயம் அபாயகரமான கட்டத்தை நெருங்கி விட்டதைத் தில்லைவனம் உணர்ந்தார். உடனடியாகச் சிந்தனையைத் தீவிரப்படுத்தி அவரும் ஒரு 'கிரிமினல்' திட்டத்தை நிறைவேற்றத் துணிந்து விட்டார். அதுதான் சதி! புரட்சி!!

முத்துவின் பம்பர ஏகாதிபத்தியத்தால் நசுக்கப்பட்ட பையன்கள் நிறைய இருப்பதை அவர் அறிந்திருந்தார். அவர்களையெல்லாம் இணைத்து ஓர் ஐக்கிய முன்னணி உருவாக்கி, அந்தக் கூட்டமைப்பின் துணை கொண்டு முத்துவுக்கெதிராகப் புரட்சி செய்து, அவனைக் கடனைக் கேட்கவிடாமல் அடிபணிய வைப்பதுதான் அவருடைய திட்டம்.

மறுநாளே, பாபுவின் உதவியால் நசுக்கப்பட்டோர் மகாநாடு ஒன்றை ரகசியமாகக் கூட்டினார். ந. அங்கத்தினர்கள் எல்லாரும் உற்சாகத்துடன்

**டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.**

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும் இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவந்தப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

பங்கெடுத்துக் கொண்டனர். முத்துவின் கொட்டத்தை அடக்க வேண்டிய அவசியத்தைப் பற்றியும் குறிப்பாக அதை மூன்று நாட்களுக்குள் செய்து தீர வேண்டிய முக்கியத்துவத்தைப் பற்றியும் முற்றிலும் பொதுநலக் காரணங்கள் காட்டிப் பேசினார் தில்லைவனம். முடிவில் எல்லாருக்கும் வயதில் குறைந்தவனான பாபுவைக் கொண்டே முத்துவைப் பழி வாங்குவது நல்ல பெருமை தரக் கூடியது என்றும் அதற்காக அனைவரும் அவனுக்கு இரண்டு நாட்களுக்குள் பம்பரப் பயிற்சி செய்து வைத்து மூன்றும்நாள் முத்துவைப் பம்பரப் போட்டிக்கு அழைத்துத் தோற்கடிக்க வேண்டும் என்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

அனுபவசாலிகளில் ஒருவன், கடுமையான பயிற்சிக்குப் பின்னும் முத்துவிடம் தோற்க நேரிட்டால் என்ன செய்வது என்ற பிரச்னையைக் கிளப்பவே, அது விஷயமும் ஆழ்ந்து பரிசீலிக்கப் பட்டது. கடைசியில் 'வெற்றி ஒன்றே குறிக்கோளாதலால், தோல்வி ஏற்படும் சூழ்நிலை உருவானால் அனைவரும் சூழ்ந்து நின்று முத்து தப்பாட்டம் ஆடியதாக அடித்துப் பேசிப் பாபுவின் வெற்றியை நிலைநாட்டியே தீர வேண்டும்' என்று உப தீர்மானம் ஒன்றும் நிறைவேற்றப் பட்டது.

மூன்றும் நாள் சொல்லி வைத்தாற் போல் தில்லைவனத்தின் திட்டங்கள் மடமடவென்று வெகு நேர்த்தியாக நிறைவேறின. பாபு அற்புதமாகப் பயிற்சி பெற்று யாருடைய உதவியுமின்றியே போட்டியில் வென்று விட்டான். அத்துடன் அவர் சொல்லி யனுப்பியது போல் முத்துவின் பேரில் ஐம்பது பைசா கடனையும் சுமத்தி வைத்து விட்டுத் திரும்பி விட்டான்.

'திட்ட நாயகம் தில்லைவனமா, கொக்கா?' என்று பெருமிதத்தில் அமிழ்ந்து போனார் தில்லைவனம். பாபுவுக்குப் பம்பரப் பயிற்சியுமாச்சு, கடனும் தீர்ந்தது. பிரஸ்தாபச் சம்பவங்களைத் தமக்குப் பெருமை தேடித் தரும் வகையில் ஒருமாதிரியாகத் திரித்துச் சொல்லி நீலாவிடம் 'இருந்தாலும் நீங்க பரவாயில்லையே!' என்ற பாராட்டையும் பெற்று விட்டார்.

மறு நாள் கம்பீரமாக ஏறு நடை போட்டு அலுவலகத்துக்குப் புறப்பட்டார் தில்லைவனம். அவர் வாசலைக் கடந்து பத்தடி தூரம் போயிருப்பார். எதிர் வரிசையிலிருந்த மின்விளக்குக் கம்ப மறைவிலிருந்து சரேலென்று வெளிப்பட்டு அவர் முன்னால் பிரசன்னமானான் முத்து.

''என்ன?'' என்று அலட்சியமாக வினவினார்.

''அந்த ஐம்பது பைசா...'' என்று இழுத்தான் முத்து.

''ஐம்பது பைசாவா? பாபுதான் உன்னை நேற்றே பந்தயத்தில் தோற்கடித்துக் கடனைக் கழித்து விட்டானே!'' என்று ஏக்காளமாகக் கூறினார் தில்லைவனம்.

''என்ன சார், பாபு ஒன்று சொல்கிறான். நீங்க ஒன்று சொல்றீங்க.''

''பாபு என்ன சொல்கிறான்?''

'' 'எங்கப்பா கணக்கு வேறே, என் கணக்கு வேறே! நீதான் வசூலிச்சுக் குடுக்கணும்'னு சொல்றான். அதோ பாபுவும் இருக்கிறான்'' என்று தான் மறைந்திருந்த இடத்தைச் சுட்டிக் காட்டினான். அங்கிருந்து பாபுவும் வெளியேறி வந்தான்.

''டேய் பாபு, என்னடா இது! உனக்கு வேணும்னு நான் அப்புறமாகத் தாரேன். இப்போ இவன் கடனைக் கழிச்சுடலாம்'' என்று மகனிடம் பரிதாபமாகக் கேட்டார்.

''போப்பா! நீ எப்படித் தருவே! உன்கிட்டே ஏது காசு? அம்மாதான் உனக்குக் காசே தர மாட்டாளே!'' என்று கூறி விட்டு அந்த இடத்தை விட்டு அகன்றான். போகிற போக்கில், ''முத்து, நீ எங்கப்பாவிடம் எப்படி வாங்குவாயோ எனக்குத் தெரியாது. நீதான் எனக்குப் பணத்தைக் கொடுக்கணும்'' என்று சொல்லி விட்டுப் போய்விட்டான்.

''சார்! உங்களுக்குக் கடைசித் தவணை இன்னும் மூன்று நாள்'' என்று கூறி விட்டு முத்துவும் போய் விட்டான்!

அவர் மண்டைக்குள் காங்கோப்புரட்சி நடந்தது. கடைசியில் ஹாமர்ஷீல்ட் போன விமானத்தைப் போல அவருடைய கடைசி நம்பிக்கையும் நொறுங்கி விழுந்தது!

திட்டங்கள் தோல்வியுற்றதும் திருவாளர் தில்லைவனத்தின் திட்ட மூளை ஓய்ந்ததாகத் தெரியவில்லை. இதுவும் அவருடைய திட்டத்தினால் ஏற்பட்ட வழியாகத்தான் இருக்கவேண்டும். இப்பொழுது சில நாட்களாக, உலகத்திலுள்ள ஒவ்வொரு நியாய உணர்ச்சியுள்ள மானஸ்த கடன்காரனும் பின்பற்றும் ஒரு வழியான, பின் வாசல் ரகசியப் போக்குவரத்துக்களில் ஈடுபட்டு அஞ்ஞாதவாசம் செய்து வருகிறார்! மீண்டும் அவர் முத்து கையில் சிக்கும் போது அதற்கென்று ஒரு திட்டம் அவருக்குத் தோன்றுமலா இருக்கும்?

மிகச்சிறந்தது!




வீட்டிற்கும் — ஹோட்டலுக்கும்

ப்ரூக் பாண்ட்

ஸ்பெஷல் ஹோட்டல் ப்ளெண்ட்

டஸ்ட் தேயிலையே

* ஒவ்வொரு பாக்கெட்டும் அதிகப்படியான கோப்பைகள் நல்ல தேநீர் கொடுக்கிறது.
* ஈரம்படியாதவாறு பாக்செய்யப்பட்டிருப்பதால் புத்தம் புதுமைக்கு உத்திரவாதம் அளிக்கிறது
* லட்சக்கணக்கான வீடுகளில் இதனை விரும்பி அருந்தி ஆனந்தம் அடைகின்றனர்.

மூன்று அளவுகளில் கிடைக்கிறது
500 கிராம், 100 கிராம்,
50 கிராம்

JWT 88 38



6-3-12

# * எல்லோராலும் புகழப்படுவது




"டிரெயான்ஸ்" ரேயான் நூல்களினுல் நெய்த ஆடைகள் எல்லோராலும் புகழப்படுகிறது.

இந்தியாவில் முதல் முதலாக சிறந்த ரசாயன முறையில் தயாரிக்கப்பட்ட உன்னத நூல் "டிரெயான்ஸ்" ரேயான் நூல்கள். விலை மலிவு-நீண்ட கால உழைப்பு-பகட்டான உடைகளுக்கு ஏற்றது.

"டிரெயான்ஸ்" ரேயான் நூல்கள் 100, 120, 150, 300 டினையர்களில் தயாரிக்கப்படுகின்றன.



*

Rt

ஸ்டாக்கிஸ்டுகள்

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

போன்: 21641 61, செம்புதாஸ் தெரு, சென்னை–1. தந்தி: "CELYARN"

கிளைகள்:

போன்: 253. தந்தி: "CELYARN" 68/416, மெயின் ரோடு, செவ்வாப்பேட்டை, சேலம்.

போன்: 598. தந்தி: "CELYARN" 114/A, தெற்கு மாசி வீதி, மதுரை.

போன்: 3441. தந்தி: "RAYONS" யூனைடெட் இந்தியா பில்டிங் அவினாசி ரோடு, கோவை.



# தலைவர் தையல் நாயகம்



கே.வேங்கடராமன்

"என்னங்க, நேரமாகலே?" என்று கேட்டுக் கொண்டே கையில் குல்லாயுடன் வந்தாள் திலகம்.

"நான் அப்பவே 'ரெடி'யாயிட்டேன்! கார் வந்திடிச்சா, பாரு!" என்ருர் தையல்நாயகம், ஜிப்பாவை இழுத்து விட்டு, சால்வையைத் தோளில் இழுத்துப் போர்த்திய வண்ணம்.

வெளியே ஒரு முறை பார்த்து விட்டு, "பர்புர்னு ஓடற காரைக் காணேம், வானத்திலேதான் கார் ஓடுது!" என்ருள் திலகம், தமது தமிழறிவைக் காட்டிச் சிரித்தபடியே.

"அப்பவே அனுப்பறேன்னுரே, சுருட்டுக் கம்பெனி சாயபு!....உம்... சுருட்டு ஏற்றுமதிக்கு 'பெர்மிட்' வாங்கித் தாங்கன்னு தலேகீழா நின்ருன், மனுஷன். டில்லி வரையில் போயி வாங்கிக் கொடுத்தேன். காரை அனுப்பினுரு பாரு!" என்ருர் தையல்நாயகம் மூக்குக் கண்ணுடியைத் துடைத்து மாட்டியபடியே.

"நீங்க ஒரு தலேவரு, உங்களுக்கு ஒரு கூட்டம், கோஷம்! காலணக் காசுக்கு வழி இல்லே!" என்று முகவாய்க் கட்டையைத் தோளில் இடித்துக் கொண்டாள் திலகம்.

"அதென்ன, நீ அப்படிச் சொல்லிப்பிட்டே திலகம்! நாட்டுக்காக இன்னிக்கு நான் உழைச்சா நாளேக்கே என்னேட அறுபதாம் வயசு மணி விழாவிலே ஆயிரமாயிரமா பண முடிப்புக் கொடுக்கிருங்க சனங்க!" என்ருர் தையல்நாயகம். பிறகு மனேவியிடம் மெதுவான குரலில் "ஆமாம்! நாலு நாளேக்கு முன்னடி சௌகார்ப்பேட்டையிலே ஒரு வெள்ளிப் பாத்திரக் கடை திறந்து வைச்சேனே, அங்கேயிருந்து ஏதாச்சும் வந்திச்சா?" என்று கேட்டார்.

"வெள்ளிக் குத்துவிளக்கு ஒண்ணேப் பார்த்து விட்டு அதனேடே வேலேப் பாட்டிலே அப்படியே மயங்கிப் போய் நின்னுட்டீங்களாமே!"

"அப்படீன்னு அந்தக் கடைக்காரன் சொன்னுனு?" என்று கண்களேச் சிமிட்டியபடி கேட்டார் தையல்நாயகம்.

"ஆமாம். ஐயாவுக்கு நம்ம கடை அன்பளிப்புன்னு அந்தக் குத்துவிளக்கை இன்னிக்குக் காலேயிலேதான் கொடுத்து விட்டுப் போனுன் ஒரு சேட். அதிலே மயங்கிப் போகிறமாதிரி வேலேப்பாடு ஒண்ணேயும் காணுேமே!" என்று கேட்டாள் திலகம்.

"போடி, பைத்தியம்!" என்று சிரித்தார் தையல்நாயகம். 'அதெல்லாம் சும்மா அப்படி நடிப்பு! அப்போத்தானே அந்தப்பொருள் நமக்குவேணும்கிறதைக் காட்டிக்க முடியும்? ஒரு தலேவரு, நாவு அசைஞ்சா இந்த நாடே அசையக்கூடிய தலேவரு குத்துவிளக்குத் தாங்கன்னு கேட்க முடியுமா? இதோ பாரு, திலகம்!

இத்தனை நாட்களா இந்த நாட்டுக்கு நான் தன்னலம் பாராமல் உழைச்சதுக்கு இந்த நாடு எனக்குக் கொடுத்தது என்ன?'' என்று கேட்டார் தையல் நாயகம்.

''ஏன் கொடுக்கலே? நிறையக் கொடுத்துச்சே பூ மாலையும், போகிற இடத்துலே எல்லாம் சாப்பாடும்!'' என்றாள் திலகம் அவருடைய ஆத்திரத்தை அதிகரித்தவளாய்.

''பூவும் புகழும் யாருக்கு வேணும்?'

''நீங்கதானே ஆசைப்பட்டீங்க?''

''இனிமேல் தேசத்தொண்டு, சேவை, உழைப்பு எல்லாம் சுயநலத்தோட தான்!'' என்றார் தையல்நாயகம்.

''இன்னிக்கு எங்கேயோ திறப்பு விழான்னு புறப்பட்டுக்கிட்டு இருக்கீங் களே, அங்கே என்ன கிடைக்கும்?'' என்றாள் திலகம்.

'' வெள்ளிக் கத்திரிக்கோல் !'' என்றார் தையல்நாயகம்.

''அதைத்தான் உங்கள் சுபாவப்படி ஏலத்திலே விட்டுடுவீங்களே!''

தையல்நாயகம் வலது பக்கவாட்டில் திரும்பி இரண்டு கை விரல்களாலும் வலது பக்க ஜிப்பாப் பையைத் திறந்து காட்டினார்.

''இந்தப் பையிலே போட்டுக்கிட்டு வந்திடுவீங்களாக்கும்!'' என்று கேட்டு விட்டுக் கலகலவெனச் சிரித்தாள் திலகம்.

''நீ வேணும்னு பாரேன்!'' என்றார் தையல்நாயகம்.

வெளியே கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

''எத்தனை நாட்களுக்குத்தான் ஒசி யிலே காரோ?'' என்று வெளியில் வந் தார் தையல்நாயகம்.

''அறுபதுக்கு அறுபதிலே சனங்க வாங்கித் தரமாட்டாங்களா?''

''அதுவரையிலே நானும் என் னோட கட்சியும் இருக்கோமோ என் னவோ? கோடம்பாக்கத்திலே புதுசு புதுசா வீடுகள் முளைக்கிற மாதிரிதான் நாட்டிலே தினத்துக்கு ஒரு கட்சி முளைச்சுக்கிட்டிருக்கே!'' என்றபடி காரில் ஏறினார் தலைவர் தையல்நாயகம்.

''ஞாபகமா கொண்டு வாங்க!'' என்று அவரது காதில் கிசுகிசுத்தபடி ஆள்காட்டி விரலையும் அதற்கடுத்த விர லையும் ஒன்றன்மீது ஒன்றாய் வெட்டிக் காண்பித்தாள் திலகம்.

''கத்திரிக்கோல்தானே?'' என்றபடி சிரித்த தையல்நாயகம் ''வெள்ளிக் குத்து விளக்கை அலமாரியிலே வைச் சுப் பூட்டு! ஏதாவது இரும்புக் கடைக்கு ஆண்டு விழா வரும். அப்போ ஒரு இரும்புப் பெட்டி பார்த்துக்கிடலாம்'' என்றார் மனைவியிடம் மெதுவாக.

கார் 'கிர்' ரென்று புழுதியைக் கிளப்பிக் கொண்டு கிளம்பித் தெருக் கோடியில் ஒரு வட்டம் அடித்து விட்டு மறைந்தது.

தலைவர் தையல்நாயகத்தைத் தெரி யாதவர்கள் யாராவது இருப்பார்களே யானால் அவர்கள் நிச்சயம் தமிழ் தெரி யாதவர்களாகத்தான் இருப்பார்கள்... தமிழ் மொழிக்கு அவரால் ஒரு வளர்ச்சி யும், தமிழுக்கு அவரால் ஒரு புது வாழ் வும், தமிழ் நாட்டுக்கு அவரால் ஒரு விழிப்பும் ஏற்பட்டுள்ளதென்றால் தனிப் பெரும் தலைவர் தையல்நாயகம் அவர் களைப் பற்றி நாம் அதிகம் கூற வேண் டியதில்லை!



தேச சேவையையே தம் முழு மூச்சாகக் கொண்டவர் அவர். நாட்டின் விடுதலைக் கீதம் அவரைத் தட்டி எழுப்பியபொழுது சிலிர்த்து எழுந்த இளம் சிங்கமான அவர் சிறை சென்றதுக்குத்தான் ஒரு கணக்குண்டா, இல்லை, அங்கு சிறுமைப்பட்டதுக்குத்தான் ஒரு வழக்குண்டா?

ஏழை எளியவர்களின் துன்பத்தைக் கண்டு கரகரவெனக் கண்ணீர் சிந்துவார் அவர். மனம் உருகுவார். ஆதி காலத்தில் தொன்றுதொட்டு முன்னோர்களது ஒரே ஆஸ்தியாகப் பரம்பரைச் சொத்தாக இருந்து வந்த அரண்மனை போன்ற வீட்டை விட்டு விற்றுச் சேரி வாசிகளுக்கு ஆஸ்பத்திரி கட்டிக் கொடுத்தவர் அவர்.

கல்வியா, சுகாதாரமா, கலையா, அறிவுத் துறையா, எதில் இந்த நாட்டு மக்களின் நலனுக்காகப் பாடுபடவில்லை இந்தத் தையல்நாயகம்?

திருக்குறளிலிருந்து பைபிள் வரை, ஆஸ்திகத்திலிருந்து நாஸ்திகம் வரை, பஞ்சாயத்து விஷயத்திலிருந்து நேற்றை அயல்நாட்டு விவகாரம் வரை அவர் பேசாத மேடை உண்டா, ஒரு பட்டி தொட்டி உண்டா?

விதவா விவாகமா? அதுவும் பத்து முப்பது வருடங்களுக்கு முன்பா? தையல்நாயகம் துணிந்து நின்று திலகத்தைக் கைப்பிடித்து மணந்து, இந்த நாட்டில் கதியற்று வாழும் எண்ணற்ற இளம் கைம்பெண்களைத் தைரியமாக இளைஞர்கள் திருமணம் செய்து கொள்ள அன்றே வழி காட்டியவராயிற்றே!

எத்தனை தடியடிகள்! எத்தனை தியாகத் தழும்புகள்!

பேச்சில்தான் எவ்வளவு புள்ளி விவரம்! என்ன கவர்ச்சி! அனல் தெறிக்கப் பேசுகின்ற அவரால் தேன் சொட்டச் சொட்டக் கவிதை நயத்தோடு பேசவும் முடியும்! இந்த நாட்டு இளம் தலைமுறைகள் எல்லாம் அவருடைய கனல் தெறிக்கும் பேச்சில் இதயத்தைப் பறிகொடுத்தவர்களாயிற்றே!

சுயநலம் என்ற சொல்லுக்கே இடம் இல்லாத வாழ்வு அவருடையது. நாலு முழ வேஷ்டியும், அரைக் கைச் சட்டையும், மூன்று முழத் துண்டும்தான் அவர் அணியும் உடைகள். உடைகளைப்போல் வெள்ளையானது அவருடைய உள்ளம்.

ஒழுக்கசீலர் என்று அவரை நாடே கொண்டாடியது. தன்னலமற்ற தியாகி என்று சுதந்திர சர்க்கார் அவருக்கு ஐந்து ஏக்கர் நிலம் கொடுத்த பொழுது அதைத் தம் தியாகத்தின் பரிசாக ஏற்றுக் கொள்ளாமல் மறுத்தாரே. அப்பொழுது அவரது பெருமை இமயமாக உயர்ந்தது!

பத்தாண்டுகளுக்கு முன்பு அப்படி. இப்போதோ......?

**தா**ர் போட்ட ரஸ்தாவில் கார் வாயு வேகமாகச் சென்று கொண்டிருந்தது. வெளியேயிருந்து 'சில்'லென்ற குளிர்ந்த காற்று தையல்நாயகத்தின் முகத்தில் அடித்தது. வெளியே தலை நீட்டி வானத்தைப் பார்த்தார்.

திலகம் சொன்னது சரிதான்! கார் மேகங்கள் கருகரு வென்று வானத்தை வளைத்துக் கொண்டிருந்தன. எந்த நேரத்திலும் வானம் பொத்துக்கொண்டு விட நேரம் பார்ப்பது போல் மழை வரக் காத்துக் கொண்டிருந்தது.



''இன்னும் எத்தனை மைல் அப்பா இருக்கிறது?'' என்று டிரைவரிடம் கேட்டார் தையல்நாயகம்.

''முப்பது மைலுங்க!'' என்றான் டிரைவர்.

'பட்டிக்காட்டு ஊரிலே பள்ளிக் கூடம் ஒன்னைத் திறந்து வைக்கிறது நல்ல காரியம்தான்! ராத்திரி சாப்பாட்டுக்குச் சோறுகூட கிடைக்குமோ என்னவோ கிராமத்திலே!'' என்று தமக்குள் முணு முணுத்துக் கொண்டார் தையல்நாயகம்.

வயிறு என்ற ஒன்றையே மறந்து அவர் இந்நாட்டுக்காக உழைத்த காலம் மலையேறி விட்டது!

வீடு, வாசல், பெண்டாட்டி பிள்ளை என்ற நினைவெல்லாம் தம்மை மறந்து இந்த நாட்டுக்கு உழைத்த காலத்தில் பெரிதாகத் தோன்றாமல் இப்போது அவை விசுவரூபம் எடுத்துக் காட்சியளித்தன.

எந்தக் காரியத்தைச் செய்தாலும் அதனால் தமக்கு ஏதாவது பயன் உண்டா என்ற கேள்வி உண்டாகத் தொடங்கி விட்டது அவருள்.



பூ மாலைகளாகப் போடுகிறவர்கள் பண முடிப்புக்களாகக் கொடுக்க மாட்டார்களா என்ற ஏக்கம் வளரத்தொடங்கிற்று அவரிடம்.

சுயநலமற்று இந்த நாட்டுக்கு உழைத்ததின் பலன் இன்று பெருகி நிற்கும் அவருடைய வீடு வறுமையில் சிக்கித் தவித்துக் கொண்டிருப்பதைக் கண்டதும் இத்தனை நாட்களும் தலையைக் கூடக் காட்டாத அவருடைய தன்னலம் தன் எண்சாண் உடம்பையே இப்போது காட்டத் தொடங்கியது.

இதோ ஒரு கிராமத்தில் பள்ளிக் கூடம் ஒன்றைத் திறக்கப் போகிறாரே, அங்கே கூடத் திறப்பு விழாவுக்காக வெள்ளிக் கத்திரிக்கோல் ஒன்றைப் பரிசளிக்க நூறு ரூபாய்க்கு வாங்கி வைத்திருப்பதாகக் கேள்வி!

வேகமாகப் போய்க் கொண்டிருந்த கார் 'படீர்' என்று சத்தத்துடன் நின்றதுடன், ஒரு காலும் முடங்கிப் போய் நடு ரோட்டிலேயே படுத்து விட்டது!

''என்ன டிரைவர், என்ன காருக்கு?'' என்று பறந்தார் தையல்நாயகம்.

''டயர் வெடிச்சிடுச்சுங்க!'' என்றான் டிரைவர்.

''வேறே டயர் இருந்தால் உடனே மாற்றிக் காரை கிளப்பு! விழாவுக்கு 'டயம்' ஆகுது!''

''வேறே டயர் கொண்டாரலீங்களே!'' என்றான் அழாதகுறையாக.

பாதி வழியில் பரிதவிக்க விட்டு விட்ட காரைச் சபித்துக் கொட்டினார் தையல்நாயகம்.

''இன்னும் எத்தனை மைல் இருக்கும் கிராமத்துக்கு?'' என்று கேட்டார் டிரைவரிடம்.

''மூணு மைல்தானுங்க!'' என்று பதில் வந்தது டிரைவரிடமிருந்து.

கைத்தடியை 'டக் டக்' என்று ஊன்றிக் கொண்டு சாலையில் நடக்கத் தொடங்கி விட்டார் தையல்நாயகம்.

நடுச் சாலையில் காரை விட்டு விட்டு வந்து முதலாளியிடம் திட்டு வாங்கப் பயந்த கார் டிரைவர், நடந்து செல்லும் தையல் நாயகத்தைக் கண்டு திகைத்து நின்றான் செய்வதறியாது!

ஒரு மைல் தூரம்தான் நடந்திருப்பார் தையல்நாயகம். 'ஸ்பீக்க'ரில் 'நம் மதிப்புக்குரிய தலைவர் அவர்கள் வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டார். காரில் வந்துகொண்டிருக்கிறார்கள்!.... இப்போது வந்து விடுவார்கள்...பொது மக்களே.....அமைதியாக இருந்து விழாவைச் சிறப்பாக நடத்திக் கொடுக்கும்படி தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறோம்....' என்று விழாக் கமிட்டியினர் யாரோ பேசுவது காற்றில் அரையும் குறையுமாகத் தையல்நாயகத்தின் செவிகளில் வந்து மோதின.

காலை எட்டிப் போட்டு நடந்தார் தையல்நாயகம். திறப்புவிழாவுக்காக இல்லாவிட்டாலும் வெள்ளிக் கத்திரிக்கோலுக்காகவாவது அவர் போயாக வேண்டும். வீட்டுக்குப் போனதும் போகாததுமாகத் திலகம் அவருடைய ஜிப்பாப் பைக்குள் கையை விட்டுப் பார்ப்பாளே!

ஆயிற்று. இன்னும் கொஞ்ச தூரம் தான் என்று தையல்நாயகம் நடந்த பொழுது வானம் குமுறி விட்டது. கட கட வென உருண்டது. கண்ணைப் பறிக்கும் மின்னல் சடார் சடாரென்று வெட்டியது. ஆளையே அலாக்காகத் தூக்கிக் கொண்டு போய் விடுமோ என அஞ்சும்

படியான புயல் காற்று வீசியது. மரங்களெல்லாம் தலை விரித்துப் பேயாட்டம் ஆடின. அம்பு, அம்பாய் மழை தாரை தாரையாய்க் கொட்டியது!

தையல்நாயகம் சிரமப்பட்டு நடந்து கொண்டிருந்தார்.

மின்னல் ஒன்று சுத்த பிரகாசத்துடன் 'சர்'ரென்று பூமியில் இறங்கியதும் வானம் 'கடகட' வென்று முழங்கியது. இடி இடித்து, அது ஒரு பச்சை மரத்தைத் தாக்கி, அந்த மரம் வேரோடு 'ஹோ'வென விழ, அதன் அடியில், போய்க் கொண்டிருந்த தையல்நாயகம் அந்த வனந்தரமே கிடுகிடுக்கும்படியாக 'அம்மா' என்று கதறியபடி கீழே சாய்ந்தார்.

கண் விழித்த போது பாழ் மண்டபம் ஒன்றில் தாம் படுத்திருப்பதையும் எதிரே ஓர் இளைஞன் தனது தெப்பமாக நனைந்து விட்ட மேல் துண்டைப் பிழிந்து தலையைத் துவட்டிக் கொண்டிருப்பதையும் கண்டார் தையல்நாயகம்.

இடியால் தாக்கப்பட்ட மரம் 'தட தட' வென முறிந்து வேரோடு அவர் மீது சாய்ந்ததே, அப்போது அவரைக் காப்பாற்றியது இந்த இளைஞனா?

''தம்பி!'' என்று அழைத்தார் தையல்நாயகம்.

மழையினால் ஏற்பட்ட இருட்டும், கல் மண்டபத்தினுள்ளே நீக்கமற வியாபித்திருந்த இருளும் உருவத்தை மங்கலாகத்தான் தெரியும்படி செய்தனவே தவிர முகத்தை அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை.

''நீயா தம்பி என்னைக் காப்பாத்தினே?'' என்று ஈனஸ்வரத்தில் கேட்டார் தையல்நாயகம்.

''ஆமாங்க. மழைக்காக இந்த மண்டபத்திலே நான் ஒதுங்கிக் கிட்டிருந்தப்போ, இடி விழுந்த மரத்துக்கிட்டே நீங்கள் போய்க்கிட்டிருந்தீங்க. ஒரு நொடியிலே பாய்ஞ்சி உங்களை இந்தப் பக்கமா இழுத்துப் போட்டுட்டேனுங்க! அதோ பாருங்க அந்த மரத்தை!'' என்று காட்டினான் அந்த இளைஞன்.

கொடிய அரக்கன் ஒருவன் வதைபட்டுக் கையையும் காலையும் விரித்துக் கொண்டு 'ஹோ'வென்று கிடப்பது போல் அந்த மரம் ரோட்டின் குறுக்கே விழுந்து வயிலினுள்ளும் நீண்டு கிடந்தது! அதைக் கண்டதும் தையல்நாயகத்தின் மெய் பாதாதிகேச பரியந்தம் நடுங்கியது. அந்த மரத்தடியில் அவர் சிக்கியிருந்தால் அதை நினைத்துப் பார்க்கவே அவருக்கு அச்சமாக இருந்தது!

தம்மைக் காப்பாற்றிய இளைஞனைக் கையெடுத்துக் கும்பிட்டார் தையல்நாயகம். அவன் செய்த உதவிக்காக அவருடைய தோலைச் செருப்பாகத் தைத்து அவனுக்குப் போட்டாலும் காணாதுதான்! தம் உயிரைக் காப்பாற்றி விட்ட அவனுக்கு என்ன கைம்மாறு செய்யலாம்?

அந்த இளைஞனைப் பார்த்தார் தையல்நாயகம். கிழிந்த சட்டையும், அழுக்கான வேஷ்டியும், காய்ந்த உடம்பும் அவனது வறுமையைப் படம் பிடித்துக் காட்டவே தமது அடி மடிக்குள் கையை விட்டு 'பெல்டி'லுள்ள 'பர்'சிலிருந்து பத்து ரூபாய்த் தாள் ஒன்றை எடுத்து நீட்டினார் தையல்நாயகம்.

''எதுக்குங்க?'' என்றான் அவன்.

''என் உயிரைக் காப்பாத்தினே நீ!'' என்றார் தையல்நாயகம்.

''மத்தவங்க உயிரை என் உயிராக நினைக்கிறவனுங்க நான்!'' என்றான் அந்த வாலிபன் அடக்கமாக.

''பரவாயில்லே, வாங்கிக்க!''

''இல்லைங்க! நான் அதை வாங்கிக்கிட்டா செய்த உதவிக்கும்புரிகிற தொண்டுக்கும் கைம்மாறு எதிர்பார்த்தவனாகி விடுவேனுங்க! பிரதிபலன் பாராமல் இந்த நாட்டு ஏழை மக்களுக்காகப் பாடுபடறவனுங்க நான்! செய்கிற வேலைக்குக் கூலி எதிர்பார்க்கிறவன் இல்லீங்க!''

''நல்லாப் பேசறீயே நீ! ஊருக்கு உழைச்சா உன் வயிறுதான் காயும், தெரியுமில்லே?'' என்று கேட்டார்.

''பரவாயில்லே! மனசு நிறையுமில்லே? எங்க தலைவரு அப்படித்தான் அடிக்கடி சொல்வாரு. 'செய்கிற எந்தக் காரியத்திலேயும் சுயநலம் இருக்கக் கூடாது! மேகத்தை மாதிரி எதிர்பார்க்காம நம்ம கடமையை நாம் செய்துக்கிட்டுப் போகணும்! ஏழை எளியவங்களை உடன் பிறப்பா நினைக்கணும். தன்னலம் இல்லாது உண்மையாகச் செய்கிற தொண்டு தெய்வத்துக்குச் செய்கிற தொண்டு. அப்படியெல்லாம் எங்க தலைவரு சொல்வாருங்க. அருமையான உண்மைங்க அதெல்லாம்!'' என்றான் அவன்.

''அது யாரப்பா உங்க தலைவர்?'' என்று கேட்டார் தையல்நாயகம்.

**டிசம்பர் 7உ கொடி தினம்**

இத்தினத்தில் மாஜி ராணுவத்தினருக்கும் அவர்களது குடும்பத்தினருக்கும் தாராளமாக உதவி புரியுங்கள்.

''தையல்நாயகம்!'' என்றான் அந்த இளைஞன்.

''தையல்நாயகமா?'' என்று கேட்டார் தையல் நாயகம். அவருடைய பொன்மொழிகளையும் அறிவுரைகளையும் வாழும் வழிமுறைகளையும் கேட்க அப்படியே நடக்கும் கணக்கற்ற தொண்டர்கள் இந்த நாடு முழுவதும் பரவிக் கிடக்கும்போது அவர் எப்படிச் சுயநலப் பிரியர் என்று தம்மைத்தாமே கேட்டுக் கொண்டார். அந்த இளைஞனின் பிரதிபலன் எதிர்பாராத மனப்பான்மையை அவருள் வார்த்தது அவரது உபதேசங்களும் அறிவுரைகளும் அல்லவா?

தலைவர் சுயநலத்தால் தாழத் தாழத் தொண்டன் உயர்ந்து கொண்டே போவது எதனால்?

தையல்நாயகம் தமது சுயநலமான வாழ்வை எண்ணித் தலைகுனிந்து கொண்டார். லட்சக்கணக்கானவர்களுக்கு வழிகாட்டுபவர் தமது லட்சியப் பாதையிலிருந்து விலகலாமா?

''ஆமாம்! தையல்நாயகம்தான்! உங்களுக்குத் தெரியாது?''

''தெரியாது!'' என்றார் தையல் நாயகம்.

''தையல்நாயகத்தைத் தெரியாத தமிழனும் ஒரு தமிழனய்யா! தன்னலமற்ற தியாகி ஐயா அவரு! இந்த நாட்டு மக்களுக்காக அல்லும் பகலுமா கைம்மாறு எதிர்பாராம பாடுபடற சுயநலம் இல்லாத மனிதரய்யா அவரு! அவர் காட்டின திக்கிலே லட்சம் லட்சமா நடக்க நாங்கள் தயாராக இருக்கோம். அவரைப் போன்ற தலைவரு எங்கே கிடைப்பாரு! அஞ்சு ஏக்கர் நிலம் வேண்டாம்னாரு. எம். எல். ஏ. பதவி வேண்டாம்னாரு. இந்த நாட்டு மக்களோட நல்வாழ்வுக்காகத் தன்னையே அர்ப்பணிச்சுக்கிட்ட தங்கத் தலைவரு ஐயா எங்கள் தலைவர் தையல்நாயகம்'' என உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான் இளைஞன்.

இளைஞனின் ஒவ்வொரு வார்த்தையும் தையல்நாயகத்தைச் சுட்டது. நாடே நம்பிக்கொண்டிருக்கும் தையல் நாயகமோ வெள்ளிக் குத்து விளக்கை வீட்டில் சேர்த்த கையோடு வெள்ளிக் கத்திரிக்கோலுக்காக ஆசைப்பட்டு வந்திருப்பவர்! எண்ணற்றவர்களின் இதயத்திலே அவர்கள் வழிபடும் தெய்வமாய்த் தம்மைப் பிரதிஷ்டை செய்து கொண்டுவிட்ட அந்தத் தையல்நாயகம் இப்பொழுது பொருள் சேர்க்கும் ஆசையில் தொண்டைச் சுயநலமிக்க வியாபாரமாக்கி விட்டார்!

பத்து ரூபாய்க்காக பத்தாயிரம் ரூபாய்க்குச் சமம் அந்த இளைஞனுக்கு. ஆனாலும் அதைச் சமமாக மதிக்கும்படி அவனைச் செய்துவிட்டது எது? தையல்நாயகத்தின் அறிவுரைகளும், — அவர் இத்தனை நாட்கள் வாழ்ந்து வந்த பிரத்தியட்ச வாழ்வின் உண்மையுமல்லவா?

தலைவர் என்பவர் தொண்டர்களுக்கு உபதேசிப்பவர் மட்டுமா? இல்லை, அந்த உபதேசங்களின்படி வாழ்ந்தும் காட்ட வேண்டியவர்!

தையல்நாயகத்தின் கண்கள் கசிந்தன. பொன்னையும் பொருளையும்விட இந்த நாட்டு மக்களின் இருதயத்தில் அவரது தன்னலமற்ற வாழ்வினால் கிடைத்திருக்கும் இடம் பெரிதல்லவா?

''தம்பி, நீ தையல்நாயகத்தைப் பார்த்திருக்கிறாயா?'' என்று அவனிடம் கேட்டார் தையல்நாயகம்.

''இல்லீங்க. அவரைப் பத்தி நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். ரொம்பப் பத்திரிகையிலே படிச்சிருக்கேன். பக்கத்துக் கிராமத்திலே பள்ளிக்கூடம் ஒண்ணைத் திறக்க அவர் இன்னிக்கு வருகிறாராம். அதுதான் போய்க்கிட்டிருந்தேன். வழியிலே பேய் மழை பிடிச்சிக்கிடுச்சு!'' என்றான் அந்த இளைஞன்.

''அப்படியா, தம்பி! வா, நானும் அங்கேதான் போறேன்! ரெண்டுபேரும் ஒண்ணாப் போகலாம். மழைகூட நின்னுடிச்சு!'' என்று அவனையும் அழைத்துக் கொண்டு கிளம்பினார் தையல்நாயகம். சுயநல இருளில் சிக்கிக் கொண்டிருந்த அவரைத் தன்னலமற்ற ஒரு நிறைந்த இடத்துக்கு அழைத்து வந்த இளைஞன் கிராமத்துக்கும் வழிகாட்டி அழைத்துச் சென்றான்.

நடந்து வரும் தையல்நாயகத்தைக் கண்டதும் விழாக் கமிட்டியினர் ஓடோடி வந்து அவரை உபசரித்தனர். தம்மால் காப்பாற்றப்பட்டவர்தான், தான் போற்றித் துதிக்கும் தலைவர் தையல்நாயகம் என்று தெரிந்ததும் அந்த இளைஞன் அடைந்த குதூகலத்துக்கு ஓர் அளவு இல்லை. சாஷ்டாங்கமாக அவரது காலடியில் விழுந்து வணங்கினான்!

திறப்பு விழா முடிந்து, நடந்த கூட்டத்தில் கீழ்க் கண்டபடி கூவிக் கொண்டிருந்தார் தையல்நாயகம்.

''பொதுமக்களே! அறியாமையைப் போக்கி அறிவைக் கொடுத்து அவனியை அறிந்து கொள்ள உதவுவது கல்வி. கல்வியை அளிப்பது பள்ளிக்கூடம். இந்தப் பள்ளிக்கூடத்தைத் திறந்தது இந்த வெள்ளிக் கத்திரிக்கோல். இதை ஏலம் விடப்போகிறேன். ஏலம் கேட்டு வரும் தொகை பள்ளிக்கூடத்தைச் சேரும்.... கேளுங்கள். நூறு ரூபாய்....நூறு.... ரூபாய்.....நூறு ரூபாய்.......''

# விமரிசனக் கடிதம்



குட்டி கிருஷ்ணன்

நாகத்துக்கு,

அம்மா அநேக ஆசீர்வாதங்கள். இங்கே எல்லாரும் க்ஷேமம். (இந்தக் கடிதத்தை நான் எழுத, சொல்லிக் கொண்டு வரும் பாட்டி உள்படத் தான்) எனக்கு மட்டும்தான் இரண்டு நாட்களாய் உடம்பு தள்ளவே யில்லை. (என்ன அதிசயம்! அப்படியானால் பாட்டி அரட்டைக் கச்சேரிகளில் உற்சாகமாகக் கலந்துகொள்வது எப்படியோ? பலவீனமான நிலையிலும் ஊரின் எந்த மூலை முடுக்கிலே நடப்பதாயிருந்தாலும் பிரசன்னமாகி விடுகிறாளே!) அந்த லேகியத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருந்த வரையில் கொஞ்சம் தெம்பாக இருந்தது. அது ஆகிவிடவே உன் அண்ணாவைக் கேட்டேன். மாசக் கடைசியாக இருக்கிறதே என்றுதான் அவன் யோசித்தான். (நேற்று அப்பா ஆபீஸிலிருந்து வந்ததும் புது லேகிய டின்னைப் பையிலிருந்து எடுத்துப் பாட்டியிடம் கொடுத்ததாக ஞாபகம்) இன்றைக்குத் தேதி இருபதுதான். இன்னும் பத்து நாளைக்கு எப்படிக் காலத்தை ஓட்டப் போகிறேன் என்றே தெரியவில்லை. முடிந்தால் ஒரு பத்து ரூபாய் (அடேயப்பா! ஒரு டின் லேகியத்தின் விலை நாலு ரூபாய் என்று அம்மாவிடம் கூறினாரே அப்பா!) அனுப்பி வை. லேகியம் வாங்கி வரச் சொல்லி உன்னை நினைத்துக்கொண்டே சாப்பிடுகிறேன். (பக்கத்து வீட்டு மாமிக்கு வெள்ளிப் பாத்திரத்தை வாங்கி வைத்துக்கொண்டு வட்டிக்குக் கடன் கொடுக்கலாம்.)

இந்த உதவியை நான் என்றைக்கும் மறக்க மாட்டேன். உங்களை நம்பித் தானே நான் நாட்களை எண்ணுமலிருந்து கொண்டிருக்கிறேன். (மஷ்கா பாலீஷ்!)

உன் மன்னிக்குத்தான் என்னைக் கவனிக்கவே நேரமிருப்பதில்லை. (ஆரம்பிச்சாச்சா! ஏதடா, அம்மாவைப் பற்றிய குற்றச்சாட்டுகள் ஒன்றையும் இதுவரை காணுமே என்று பார்த்தேன்!) அடுப்படியை விட்டால் இவள் கிளப்புக்குப் போய் விடுகிறாள்.

தப்பித் தவறி வீட்டி லிருந்தால் நாலு பத்திரிகைகளை எடுத்து வைத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்து விடுகிறாள். (உரக்கத்தான். பாட்டியும் பக்கத்தில் உட்கார்ந்து கேட்டுக் கொண்டுதான் இருக்கிறாள்!)

குழந்தை ராஜு சமர்த்தாய் இருக்கிறான். (அப்படியானால் தினம் குறைந்த பட்சம் இரண்டு குட்டுகளாவது பாட்டியின் கையினால் பெறுவது ஏனோ?)

எதிர்த்த வீட்டு மாடு கன்று போட்டிருக்கிறது. கொஞ்சம் நீர்க்க இருந்தாலும் வேளைக்கு இரண்டு படிக்குக் குறையாமல் கறக்கிறது. (திருஷ்டி போட்டாச்சோ, இல்லியோ?) ராஜுவுக்குச் சதா அந்தக் கன்றுக்குட்டியுடன் தான் விளையாட்டு. (வெள்ளை வெளேரென்று எவ்வளவு அழகாய் இருக்கிறது தெரியுமா?) நானும் உன் அண்ணாவிடம் 'ஒரு மாடு வாங்கிக் கட்டேண்டா' என்று அடித்துக் கொள்ளாத நாள் கிடையாது. (அதுதான் நடக்கிறதே தினம் ஒரு யுத்த காண்டம்) கேட்டால் தானே? பூனைதான் வளர்க்கிறான். என்ன புண்ணியம்? (பாட்டி இண்டு இடுக்குகளில் திணித்து வைக்கும் துணிகளெல்லாம் எலிகளிட மிருந்து தப்புகின்றனவே போதாதா?) தினம் பால் பாத்திரத்தை உருட்டி விடுவதுதான் மிச்சம். ('டில்லி'க்குத் தினம் ஒழுங்காக ஒரு டம்ளர் பால் தட்டில் ஊற்றி வைத்து விட்டால் பிறகு அது ஏன் திருடப் போகிறதாம்?)

எனக்கு உன்னையும் குழந்தைகளையும் நினைத்துக் கொண்டு விட்டால் உடனே வந்து பார்க்க வேண்டும் போலாகிவிடுகிறது. வரும்போது கொஞ்சம் சீடை முறுக்குப் பண்ணி எடுத்துக் கொண்டு வரலாம் என்று உத்தேசம். (அடி சக்கை! நாக்கில் ஜலம் ஊறுகிறதே. கூடிய சீக்கிரம் பாட்டிக்குக் கடிதம் எழுதி வரவழைத்துக் கொள்ளவும். என் பங்குக்குக் கொஞ்சம் பட்சணம் கிடைக்கும்)

மூக்குக் கண்ணாடி போட்டுக் கொள்ள வேண்டும் என்று பங்கஜத்தின் டாக்டர் ஆத்துக்காரர் (பலே! மிஸ்டர் பங்கஜமோ இவர்? பிரசித்தி பெற்ற டாக்டர் தான் போலும்!) சொல்லியிருந்தாரே, ஞாபகம் இருக்கா? இந்தத் தடவை அங்கே வரும்போது இந்தக் காரியத்தை முடித்துக் கொள்வதாக இருக்கிறேன். (ஐயய்யோ! வேண்டவே வேண்டாம். அப்புறம் தப்பித் தவறி இந்தக் கடிதம் இவள் கையில் சிக்கிப் படித்துப் பார்த்தும்விட்டால்?) இப்படிக்கு,

பாட்டி சொல்படி ராஜு

பி.கு: கடிதம் : பாட்டி கூறியது
விமரிசனம்: ராஜு எழுதியது

# உங்களுடைய தேய்ந்த டயர்களை
# சுந்தரம் இண்டஸ்ட்ரீஸில்
## ரீட்ரெட் செய்யுங்கள்

டிவிஎஸ்ஸில் தேய்ந்த டயர்களைப் புதுப்பித்தால் அவை
புது டயர்களைப் போலவே நீடித்து உழைக்கும். ஏனெனில்



மிக உயர்ந்த கூடுதலான குணமுள்ள காமெல் - பாக் டிரெட் ரப்பரையே டிவிஎஸ் உபயோகிக்கிறார்கள்



டிவிஎஸ் குளிர்சாதன அறைகளில் காமெல்-பாக் உலராமலிருக்கின்றன. ஆகையால் உழைப்பு நீடிக்கிறது

ரீட்ரெடிங் செய்வது எளிதன்று. அது நிபுணர்களின் வேலை. டிவிஎஸ் தொழிற்சாலையில் தேய்ந்து போன டயர்களை ரீட்ரெடிங் செய்வதற்கு நவீன நுண்ணிய இயந்திரங்களை அமைத்துள்ளார்கள். தேர்ச்சி பெற்ற நிபுணர்கள் அவற்றை இயக்குகின்றனர். விசேஷ "பாண்டிங்" முறையினால் டிவிஎஸ்ஸில் புதுப்பிக்கப் பெறும் டயர்கள் புத்துயிர் பெறுகின்றன. ஒவ்வொரு டிரக் டயரையும்—உரிய காலத்தில் செய்தால்—மூன்று முறை ரீட்ரெட் செய்யலாம்.





ரீட்ரெட் பணியில் சிறந்தவர்கள்

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்**
**பிரைவேட் லிமிடெட்**




(டி.வி.எஸ். ஸ்தாபனம்)

புதுக்கோட்டை - மதுரை
கோயமுத்தூர் - பெங்களூர்

JWT/SI-RD-1441a




## கடல் கண்ட கனவு

''கடல் கண்ட கனவு'' என்ற நவீனத்திலே, கற்பனையோடு தமிழ் நாட்டின் வரலாறும் பின்னிக் கிடக்கிறது. காலத் தேரிலே நம்மை ஏற்றி, ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த தமிழ்நாட்டுக்கே நம்மைக் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறார் ஆசிரியர் சோமு. அது மாத்திரமல்ல; ஏழாவது, எட்டாவது நூற்றாண்டில் உள்ள தமிழ் மக்களோடு நாமும் ஒன்றிப் பழகி, ஊடாடி, அவர்களுடைய தினசரி வாழ்க்கையிலே பங்கு கொள்ளவே ஆரம்பிக்கிறோம், கதையைப் படிக்கும் போது! வெறும் வரலாற்றினால் செய்ய முடியாத காரியம் இது: அரசர்களுடைய பெயர்ப் பட்டியலாலும், போர்கள் நிகழ்ந்த தேதி விவரங்களாலும், சிலாசாஸனக் குறிப்பு நுணுக்கங்களாலும் இந்த அரிய காட்சியையும் அனுபவத்தையும் உண்டாக்கிவிட முடியாது. வெறும் கற்பனையாலும் இதையெல்லாம் சாதிக்க முடியாது. ஆசிரியர் சோமு மாசற்ற காட்சியுடைய கவிஞர்; காட்டுத்தனமாகப் போகும் கற்பனைக் குதிரையை அடக்கி, சரித்திரப் புலமை என்ற கடிவாளத்தைப் போட்டு, ஓட்டுகிறார். அதன் பலனாகப் பல்லவர் காலத்துத் தமிழ் நாட்டைத் தொட்டுப் பிடித்து, நம் முன்னே அப்படி அப்படியே நிறுத்தி விடுகிறார். ஆகவேதான், இந்நூலுக்கு முகவுரை எழுதிய சென்னைப் பல்கலைக் கழகச் சரித்திரப் பேராசிரியரே சொல்லுகிறார், ''கொடும்பாளூரில் ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் ஆண்ட வேளிர் குல மன்னர்கள் சிலாசாஸனங்களில் பேசப்படுகிறார்கள். ஆயினும் அவர்களைப் பற்றித் திட்டமாக அறிந்தவர்கள் நம் நாட்டில் மிகச் சிலரே. அவர்களுள் இந் நூலாசிரியரும் ஒருவர்'' என்று.

எட்டாவது நூற்றாண்டிலே நடமாடுகிறோம் என்ற உணர்வையும், மயக்கத்தையும் எப்படி ஆசிரியர் உண்டாக்குகிறார்? கலையுணர்வோடு, தந்திரமாக, சில பழந்தமிழ்ப் பெயர்களையும், விவரங்களையும் ஆங்காங்கே தூவி விடுகிறார். கதையைப் படிக்கும்போது காஞ்சிக் கடிகையிலே கற்றுத் தேர்ந்த வைணவப் பண்டிதராகிய 'தரணி கொண்ட போசரை'ச் சந்திக்கிறோம். 'வாத்திய வித்தியாதரன்' என்று பெயர் பெற்ற மகேந்திர வர்மன், 'பரிவாதினி' என்ற வீணையிலே, பல புதிய இசை வடிவங்களை வகுத்து, அந்த நுட்பங்களையெல்லாம் குடுமியாமலையிலே நிரந்தரமான - கல்வெட்டுக்களாகச் செதுக்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். 'மல்லி நாயக யாழ்ப்பாணர்' இருபத்தொரு தந்திகளோடு அமைந்த 'பேரியாழை' வைத்துக் கொண்டு, 'தாரத்தாக்கம்' என்ற பழந்தமிழ் இசை முறைப்படி அபூர்வமான கற்பனைகளைத் தோற்றுவிப்பதைப் பார்க்கிறோம். 'கோனாட்டின்' தலைநகரமாகிய கொடும்பாளூரில், 'குங்கும மாளிகை'யிலே, யாழ் நங்கையின் நிழலிலே, அதி பயங்கரமான அரசியல் சூழ்ச்சிகள் நடக்கின்றன. சித்தன்ன வாசல் மலைக் குகையிலே காஷாயம் அணிந்த சமண முனிவர்களுடைய சாணக்கியம் இயங்குகிறது. தென் கடலிலே மிதப்பவை இருபதாவது நூற்றாண்டுக் கப்பல்களா? இல்லை — ''கலங்கள், மிதவைகள், நாவாய்கள், திமில்கள்.'' அவைகளிலே போகும் சரக்கு 'நைலான்' புடவைகள் அல்ல; கோசிகம், பீதகம், அரத்தம், கோங்கலர் முதலிய 'நுண்துகில்கள்'. இந்தச் சூழ்நிலையிலே நடமாடுகிறார் ஒரு விசித்திர சித்தர். அவருடைய குமிழ்க் கட்டையின் 'டக் டக்' என்ற ஓசையும், அவர் பிரம்பு, 'பளார் பளார்' என்று தரையில் படும் ஓசையும், கதையின் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் எதிரொலி செய்து கொண்டிருக்கின்றன. இவையெல்லாம் சேர்ந்து செய்கின்ற மயக்கந்தான் கதைக்கு உண்மைத் தோற்றத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

கதைப் போக்கு மிகவும் விறுவிறுப்பாக இருக்கிறது. முதல் தொண்ணூறு பக்கங்களில் ஒரு திகைப்பு ஏற்படுகிறது. பிறகு திகைப்பு தெளிந்து, நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக, துரிதகதியில் செல்லுகின்றன. முடிச்சுக்கு மேல் முடிச்சுப் போட்டுக் கொண்டு செல்லும் ஆசிரியர், அவைகளை அநாயாசமாக அவிழ்க்கும்போது வாசகர்கள் உள்ளத்திலே இன்பம் சுரக்கிறது. 411 பக்கங்கள் அடங்கிய நாவலை ஒரே மூச்சிலே படித்துத் தீர்த்துவிட வேண்டும் என்ற ஆத்திரம் ஏற்படுகிறது. நூலைப் படித்து முடித்த பிறகு, எட்டாவது நூற்றாண்டை விட்டு, இருபதாவது நூற்றாண்டுக்குள் அடி எடுத்து வைக்க வேண்டியிருக்கிறதே என்ற வருத்தம் கூட ஏற்படுகிறது. கதாபாத்திரங்கள் அவ்வளவு அன்னியோன்யமாக நம்மோடு பழகி விடுகிறார்கள். உதயசந்திரன் என்ற பல்லவ அமைச்சருடைய சால்பும், மேதா விலாஸமும், அசாதாரணமான திறமையும் நம்மைப் பரவசப்படுத்துகின்றன; சாருகேசியின் நாட்டுப் பற்றும் தியாகமும் சோகத்தின் எல்லையைத் தொட்டு விடுகின்றன. சந்திரசூடனுடைய துரோகம் மன்னிக்க முடியாததுதான்; ஆனாலும் குற்றவாளியே, நீதிபதியாக நின்று, ஈவு, இரக்கமில்லாமல் தன்னைத் தானே கண்டிக்கும் போது, அவனுடைய துறவுநிலை, அவனை

மாத்திரமல்ல, நம் இதயத்தையும் புனிதமாக்கி விடுகிறது.

கதைக்குள்ளிருந்து வெளிவரும்போது, ''தமிழ்ப் பண்பாடு எவ்வளவு உயர்வானது!'' என்ற இறுமாப்பு ஓங்கி வளர்கிறது. ஒவ்வொரு தமிழனும் படித்து அனுபவிக்க வேண்டிய நூல் இது. —எஸ் மகராஜன்

பிரசுரம்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை - 1; விலை: ரூ. 7.

## நிழலாட்டம்

ராகவன் மணமானவன்: வாழ வழி தெரியாது தவிக்கும் பேதை; எழுத்துப் பிழைப்பை மேற்கொண்டு படுதோல்வி யடைகிறான். எதிர்பாராத விதமாகச் சினிமா நடிகை மனோகரியின் அந்தரங்கக் காரியதரிசியாகி விடுகிறான் ராகவன்: பிறகு படிப்படியாக அவளது மதிப்பில் உயர்ந்து அவளுடைய உள்ளத்திலும் இடம் பெற்று விடுகிறான். ஆனால் அவன் உள்ளம் மட்டும் சதா சஞ்சலத்தில் உழலுகிறது. அவனது கரம் பற்றிய மனைவி மைதிலிக்கும் மனம் பற்றிய மங்கை மனோகரிக்கும் இடையே அவன் உள்ளம் பட்ட பாடு சொல்லில் அடங்காது. வாழ்வில் எது நிஜம், எது நிழல் என்பதை அறியமுடியாமல் திக்கு முக்காடித் திணறிப் போகிறான். இதை ஆசிரியர் தமது விறுவிறுப்பான நடையில் மிகவும் அழகாக எழுதியிருக்கிறார். நாவலில் வரும் பாத்திரங்களைப் பற்றிக் கொள்ளும் நிழலாட்டம் வாசகர்களையும் பற்றிக் கொண்டு ஆட்டு ஆட்டென்று ஆட்டி வைக்கிறது. உள்ளத்தை உருக்கும் சம்பவமோ, நெஞ்சை நெகிழ்த்திவிடும் நிகழ்ச்சியோ எதுவும் இன்றி வெறும் மனப் போராட்டத்தை மாத்திரம் வைத்துக் கொண்டு இந் நூலாசிரியர் 246 பக்கங்களுக்கு இந்த நாவலைச் சுவை குன்றாமல் வளர்த்திருப்பதே அவரது திறமைக்குத் தக்க சான்று.

எழுதியவர்: ஜி. எஸ். மணி; பிரசுரம்: மல்லிகைப் பதிப்பகம், தியாகராய நகர், சென்னை — 17: விலை: ரூ. 4.

## தமிழர் தளபதிகள்

நாட்டை ஆளும் மன்னவன் நல்லவனாயிருந்து விடுவதனாலேயோ, வீராதி வீரனாக இருந்து விடுவதனாலேயோ நாட்டில் நல்வாழ்வு குடி கொண்டு விடாது. அந் நாட்டுக்குப் பகைவரால் ஆபத்து நேராவண்ணம் நாட்டின் நான்கு எல்லைகளையும் காக்க வல்ல ஆற்றலும் மன்னவனிடம் இருத்தல் வேண்டும். அதற்கு, நல்ல போர்ப்பயிற்சி பெற்ற சேனை வீரர்களும், அச் சேனையை நடத்திச் செல்லும் ஆற்றல் வாய்ந்த தளபதிகளும் இன்றியமையாதவர்களாவர்.

வீரத்துக்கும் ஆண்மைக்கும் இணையற்ற நாடாகிய பண்டைத் தமிழகத்தின் படைத் தலைவர்களில் பதினறு பேர்களைப் பற்றிய வீர வரலாறுகளை இந்த நூலில் பரக்கக் காணலாம். நூலின் முற்பகுதியில், நாற்பது பக்கங்கள் எழுதப்பட்டுள்ள தோற்றுவாயைப் படித்தாலே போதும்; அவ்வளவு பொருட்செறிவுள்ளதா யிருக்கிறது. அதற்குப் பிறகு அதியன், குதிரைமலைப் பிட்டன், கோடைப் பொருநன், திருக் கண்ணன், திருக்கிள்ளி, திருக்குட்டுவன் ஆகிய தமிழர் தளபதிகளைப் பற்றியவிரிவான கட்டுரைகளைக் காண்கிறோம். சங்க காலத்துச் செய்யுட்களை ஆங்காங்கு எடுத்து ஆண்டு இந் நூலாசிரியர் இந்நூலுக்குத் தனித்ததோர் ஏற்றம் தந்து விட்டார்.

பண்டைத் தமிழ்நாட்டு மன்னர்களின் தறுகண் ஆண்மையும், அம்மன்னர்களின் தளபதிகள் தங்கள் உயிரையும் மதியாது போர்க்களத்தில் காட்டிய வீரமும் இந்த நூலின் அடிநாதமாக அமைந்திருப்பது நாட்டுப் பற்று உள்ள எவரையும் புளகமுறச் செய்யும். தமிழ்மொழியில் சிறப்புத் தேர்ச்சி பெற அவாவும் மாணவர்கள் இந்நூலைப் படித்தால் அத் திறமையைப் பெறுதல் உறுதி.

எழுதியவர்: புலவர் கா. கோவிந்தன், எம். ஏ., பிரசுரம்: வள்ளுவர் பண்ணை, 137, பிராட்வே, சென்னை—1. விலை: ரூ.2.50

## மறதி மகாதேவன்

மறதி மகாதேவன், எமன் ஏகாம்பரம், அழுமூஞ்சி அழகப்பன், ச. சா. வாத்தியார் என்னும் நான்கு கதைகள் அடங்கியிருக்கின்றன இந்நூலில். நான்கும் சிறுவர்களுக்குரிய கதைகள். சிறுவர்கள் ஆவலுடன் விரும்பிப் படிக்கும் விதத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. விலை: 75 ந. பை.

## ஆகாய மாளிகை

பாரத நாட்டில் இமயமலை எவ்வளவு பிரசித்தமோ அவ்வளவு பிரசித்தம் அக்பர் பீர்பல் கதைகள். அவை வெறும் நிகழ்ச்சிகளைக் கோவையாக்கப்பட்ட சாதாரணக் கதைகளல்ல; அறிவுக் களஞ்சியங்கள். அக்பரின் சமஸ்தானத்தில் திவானாக இருந்த பீர்பல் புத்திக் கூர்மையில் இணையற்றவர். அவரும் அக்பரும் பழகிய நாட்களில் நிகழ்ந்தவையெல்லாம் அதியற்புதமான கதைகள் தாம். மேற்படி கதைகளைத் தொகுத்துச் சிறுவர்க்கேற்ற முறையில் இந்நூலாசிரியர் தெளிவாக எழுதியிருக்கிறார். கதை என்று கூற முடியாமல் சிறு சிறு துணுக்குகளாக உள்ளவற்றையும் பிற்பகுதியில் சேர்த்திருக்கிறார். சிறுவர் சிறுமியர்கள் படித்துப் பயனடைய வேண்டிய நூல். விலை: ரூ. 1.75.

## ஒருநாள் அரசன்

சிறுவர்கள் பெரிதும் விரும்பிப் படிக்கவும் நடிக்கவும் ஏற்ற விதத்தில் இந் நூலில் இரண்டு நாடகங்கள் காணப்படுகின்றன. ஒன்று கர்ண பரம்பரையாக நம் நாட்டில் வழங்கி வரும் கதை. அதுதான் ''ஒரு நாள் அரசன்.'' இரண்டாவது ''வாழ்க, கண்ணன்!'' அது நூலாசிரியர் சொந்தமாகப் புனைந்த நாடகம். ஆரம்பப் பள்ளி மாணவர்கள் படித்து நடிக்க விரும்பும் விதத்தில் நன்றாக எழுதப்பட்டிருக்கிறது. விலை: ரூ. 1.

மேற்படி மூன்று புத்தகங்களின் ஆசிரியர்: நெ. சி. தெய்வ சிகாமணி; பிரசுரம்: தமிழ்நாடு புத்தக நிலையம், 5, ஸ்டேட் பாங்க் தெரு, சென்னை - 2.

Printed & Published by R. Ananthana rayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# வலிகளையும் நோவுகளையும் போக்க

# ஸாரிடான் சாப்பிடுங்கள்




ஸாரிடான் வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் விரைவில் நிவாரணமளிக்கிறது. அது மூன்று விதங்களில் வேலை செய்கிறது: நிவாரணமளிக்கிறது, தெம்புடனிருக்கச் செய்கிறது, புத்துணர்ச்சியளிக்கிறது. தலைவலி, பல்வலி, ஜுரம் போன்ற உணர்ச்சி, தேக அசௌக்கியம் முதலானவைகளுக்கு ஸாரிடான் சாப்பிடுங்கள். ஸாரிடான் விரைவில், சிறிதும் அபாயமின்றி வேலை செய்கிறது. பெரியவர்களுக்கு ஒரு ஸாரிடான் வில்லை பூர்த்தியான டோஸ். குழந்தைகளுக்கு ¼ முதல் ½ வில்லை வரை போதுமானது.

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்

JWT-YT-2000

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Ceylon

# யாரோ இவள்

என யாரும் கேட்க, எவரும் வியக்க...




...உங்கள் மேனியெழிலை மிளிரச் செய்வது

செங்கமல வண்ண ப்ரீஸ்




இளம்பெண்ணே உடலெழிலின் ஒளிப்பெண்ணே,
வருகுது ப்ரீஸ்... நேசமோடு பேசிவரும் வாசனைச்
செல்வம். எழிலுக்குரிய ஒளிபெறுவீர்!
நீங்களே அழகுநிலைக் நீங்களே என்றேவரும்
பேசும்வண்ணம் பெருகு மினிமும் உங்கள்
மேனிவண்ணம்... செங்கமலவண்ண
ப்ரீஸ் சோப்வண்ணம்!

BZ-21-50 TM